இறைவனுமாயனுமென்றுமிருக்கு
மறைகடலோங்கலகன்றதுமுண்டான்
மறைவழுவாதமனோசவனெஞ்சத்
துறைவதொர்நாளுமொழிந்தறியாரால். (௧௦)

வம்பலர்மாலைமனோசவமன்ன
னம்புலிதன்குலமாகையினாலே
செம்பொருளுந்தித்திரிந்தசினஞ்சேர்
வெம்பணிதீண்டவெருவருமென்றும். (௧௧)

இன்னணமாற்றுமிசைக்குரியோனு
மன்னவர்சிங்கமனோசவனென்பான்
றன்னருளாயதடம்புயறன்னு
னன்னிலமாதுநயம்பெறுமந்நாள். (௧௨)

நிந்தைபுனைந்துநிலத்திருநீப்பான்
முந்துகுலத்தின்முறைச்செயல்விட்டே
மந்தரவாகுமனோசவமன்ன
னந்தியுளத்திலகந்தையையுற்றான். (௧௩)

ஆரமுதத்திடையாலமடைந்தாற்
சாரமுதச்சுவைதான்கெடுமாபோ
லீரமுதக்கலையிந்துகுலத்தோன்
வீரமுதற்குணமேவிலனானான். (௧௪)

யாவனகந்தையினைப்பொருள்கொண்டா
னவனவன்கணழுக்கிவறன்மை
மாவகல்காழ்ப்புமருட்கைமதத்தோ
டவறுவேட்கையிடங்கொளுமன்றே. (௧௫)

இடங்கொளுமக்கணமின்பநலத்தாற்
றொடங்குதிருப்புகழ்சாற்றியசுற்ற
முடங்கியகான்முனையூர்பொருளுற்ற
மடங்கலுமாயுமலக்கணுமேயும். (௧௬)

போதிலைகாய்முதல்பொற்புறுவித்தி
னாதலெனக்கொளகந்தையவன்பான்
மேதினிமானவர்யாரும்வெறுப்புற்
றோதுமழுக்காறுற்றதுமன்னோ. (௧௭)

சீற்றமயக்கொடுசேகிவையிற்றான்
மாற்றிரிகாமமனோசவனன்னாட்
சாற்றரும்வேதியர்தங்கிழமைத்தாங்
கூற்றுநிலக்கிறைகொள்ளமதித்தான். (௧௮)

கொள்ளமதித்தகொடுந்தொழில்வேந்தன்
றெள்ளியவிப்பிரர்செஞ்சடைமுக்கண்
வள்ளல்வளைக்கரமாலிவர்பாகத்
துள்ளபொருட்பலவுங்கவர்வுற்றான். (௧௯)

சாலிவயற்பயிறன்னடைகொண்டான்
பாலியல்பின்றுயபுரிந்துறைபூண்டான்
மேலியறீயவினைப்பயனென்றான்
மாலியல்சிந்தைநமேருசவமன்னன். (௨௦)

இக்கொடுவோன்றனிழைத்திடுபாவம்
பக்குவமாயபலத்தொடர்பாலே
பொக்கமின்மேதகுமுனைநிலத்தான்
மிக்குறுகோலபவேண்டலையுற்றான். (௨௧)

கூன்றடவிற்பயில்கோலபரோடு
மூன்றிருதிங்கண்முயன்றமராற்றா
மான்றுமமேருசவன்வல்லையின்வல்லே
தான்றருகான்முனைதையலொடுற்றான். (௨௨)

தண்டியவுணைதாரிடையன்வெம்போர்
விண்டவனீள்வனமேவவுமன்றோன்
மண்டலமாதைமணந்துவலத்தா
லெண்டருகாலமிருந்தனனிப்பால். (௨௩)

அக்கமில்கோலைபுறண்டிடவைய
மைமச்செறிகாட்டிமமேருசவன்வாளா
வெய்சுரமயிலுயினோக்கவினைத்தே
பொய்கையிறைவிபுருந்தலமுற்றான். (௨௪)

பொன்றுலகோர்பிசைபுத்தமுநியும்
வன்னமதிக்குலமீந்தருள்கோமா
னின்னலுமுற்றனனெவ்வகையானுந்
துன்னைவயல்லதனைக்குறுவாவே. (௨௫)

நீணிலவாழ்வினைநீர்த்திடவென்று
தேறுளதாவெளியின்புறலாமோ
மாறுயர்செல்வமமேருசவனுக
முனிலதாவியுணர்ந்தியதென்றால். (௨௬)

குஞ்சரமென்றுறுதார்லரியோனம்
வெஞ்சினவேங்கைமிடைந்தறுகானில்
வஞ்சகனுனமமேருசவன்மற்றோர்
தஞ்சமிலாதுதளர்ந்துழியோர்நாள். (௨௭)

தோன்றல்பரித்தழல்சுட்டிடவாடா
வீன்றவனோடியினைத்தனனென்று
ஞான்றனர்செய்துயரொட்டலர்வாளாந்
தின்றெனமம்மர்கெழீஇயினனன்னோர். (௨௮)

ஆருயிர்மைந்தனகட்டழலாகு
மாரிவறந்தவயங்கெரிவேனி
னேரியவல்லியினின்றுளம்வாடும்
பாரிதன்றேடிறைபன்னியுரைப்பான். (௨௯)

மாதுசுமித்திரைமற்றிதுகேண்மோ
யாதினியாற்றுவதெவ்விடைசெல்வேஞ்
சாதலணைந்ததுசந்திரகாந்தற்
கோதுவதென்னினியுண்டியுமின்றால். ([illegible]

ஏக்கறுமிந்தவிடுக்கணொழித்தே
காக்குநர்வேறெவர்காசினியின்மேற்
பூக்கமலத்துறைபுங்கவனென்பா
ணுக்கமிலெம்மையளித்ததையென்றோ. ([illegible]

குன்றவில்லானடிகோவலனற்ற
ளென்றுமுணுவிமையோரிவர்தம்மை
யன்றுபணிந்திலனவ்வினையாலே
யின்றடைகுற்றதகர்ந்தையெனக்கே. ([illegible]

வெவ்வியயானெனன்மேவிடலாலே
வெளவினனந்தணர்வானவரானோர்
செவ்வியமாண்பொருடவினையிற்றுற்
கவ்வையுழந்துகலங்கஞருற்றேன். ([illegible]

மாற்றலனுள்கெனமாநகரீங்கேன்
பாற்றொடிநீதருபாலகனோடு
மாற்றருமுந்தியழற்பசிகூர
வீற்றொருவேன்வனமேவினனந்தோ. ([illegible]

நீரணிவேணிதிருத்தனைமாலை
வாரமனத்துணராமருளொன்றே
வாரணருண்ணவளித்திலனன்னம்
யாரிவணுண்டியெனக்கிடுகின்றோர். ([illegible]

கண்ணனுளத்தனுகாநகழற்கா
ளுண்ணிலவுந்திருவும்பரின்மேலாம்
வெண்ணிறநீறணிவேடமிலங்கும்
புண்ணியரேவல்புரிந்தறியேனால். ([illegible]

பாங்குறுவாழைபலாவிவைநல்குந்
தீங்கனிதண்டுசெருப்பலர்சாந்தம்
பூங்குடைவெள்ளிலைபொங்குறுவர்க்கா
யீங்கிவைநல்விளையேய்ந்தனமற்றும். ([illegible]

சித்திரையாகியதிங்களினேருஞ்
சித்திரைநாண்மறைதேர்ந்தவர்தம்பாற்
சித்திரகுத்தர்சிறப்புறவீயேன்
சித்திரமன்னசெழுந்தொடிநல்லாய். ([illegible]

ஆல்ரசத்தியருச்சுனமாதி
சாலநிழற்றுதருப்பதிகத்தோர்
மேலெறியாதபவெப்பமுறாதே
வாலியவட்டையில்வைத்தறியேனால். ([illegible]

காதினிலங்கியகட்செவியெம்மான்
மேதினியுண்டருள்விண்டுவிளங்குஞ்
சேதிமணீண்மதில்சேர்மணிமுன்றில்
சோதனிகொண்டுறைந்தறியேனால். (௬0)

ஏரிருளங்கினைதீங்கிவைதாமோன்
காரிறுகாந்திருள்கண்டனைமுன்னோர்
சீரியகோயில்சிறப்பொடுசெய்யேன்
பாரில்வணங்கல்பழிச்சலிலேனால். (௬௧)

பூவனமொன்றுபுரிந்ததுகாணேன்
மாவனமாலைவனத்தயல்போகேன்
றேவையொளிற்கெழுதிங்களினூற்றேன்
மேவியபூசைவிடிந்திடுமுன்னே. (௬௨)

தாதையர்தாயர்தமக்குயர்கன்னி
மாதருதற்கண்மகாளயமற்று
மீதுறுகாமனைமித்திகளித்த
மாதிசிராத்தமளித்தறியேனால். (௬௩)

ஒட்டியதிங்களொடொன்றொருபான்மே
லிட்டுளபக்கமிருங்குருமேவு
மட்டமியாதியறந்தருமங்காட்
பட்டினிகொண்டுபசித்தறியேனால். (௬௪)

நாலுமறைக்குணவின்றிடுநற்சா
பாலமுனைத்தபலன்கெழுமோமோழ்
கோலமுறுக்கொடுகோதிரிவெண்டேன்
சாலவென்மேனிதரித்திலன்மன்னே. (௬௫)

அநாதிதுதற்கனைநன்பொறியையந்து
மெனுவின்மனத்தினிருத்தியதில்லேன்
பினுவிதொழும்புசிறந்தியகண்டி
கனுவினுமென்மிசைகண்டறியேனால். (௬௬)

விண்டுவினுமம்விளம்புமெழுத்தா
மெண்டொகைமந்திரமெண்ணிலனீதா
பெண்டொருபங்கிறைபேசியநூற்பா
லுண்டனவொன்றையுணர்த்தியதில்லேன். (௬௭)

புண்ணியமின்னவைபோற்றலிலாதே
நண்ணியதென்றிடர்நாடியினைந்தே
மண்ணில்விழுந்துமனேசவமன்ன
னுண்ணிகழ்போதமொழிந்துகிடந்தான். (௬௮)

தார்புனைகோனுடறரணிமீதே
சோர்பொடுசாய்ந்துதுடிப்புறமாற்றை
யேர்புனைமின்றிருவில்லவளொன்றும்
பேர்பொருண்மாறுறுபெண்கொடிகண்டே. (௬௯)

சேற்றெழுசெய்யசெழுங்குமுதத்திற்
றேற்றலிலாதசுரும்பிசைபோலே
வேற்றுணைநீர்வரவீழ்ந்தழுதேங்கிப்
போற்றியகேள்வன்மெய்புல்லினள்சொல்வாள். (௫௦)

சோமகுலேசதுளங்கொளிவீசு
மாமணிமார்பநின்மைந்தனொடென்னை
வேமெரிதில்லம்விடுத்தொருநீயே
போமதுகொண்டனைபுந்தியிலந்தோ. (௫௧)

ஆவொருவேன்மகனுமிவனோடுங்
காவலரின்றுழல்கன்றுடையான்போற்
றீவனமீதுதிரிந்திடுவேனோ
வாவுறுகிள்ளைமனோசவமன்னா. (௫௨)

கேளிளைநீத்தகிலேசமலாதுன்
றோளையுநீங்குதுயர்க்கடன்மூழ்கிக்
கோளரியஞ்சுகுலப்பிணையாகோ
வாளமர்தானைமனோசவமன்னா. (௫௩)

உன்னையுநீங்கியுலங்கெழுதோளாய்
பொன்னவிர்பூண்மணிபோக்கியதேபோ
லென்னையமங்கலையென்னவிசைக்குங்
கொன்னுமென்னுருயிர்கொண்டுறைவேனோ. (௫௪)

சுந்தரநின்னிருதோள்பிரிவேனோ
வந்தனன்யானுமனோசவவென்பா
டந்துறழ்நேரிடைசந்திரகாந்தா
வுந்தையயர்ந்துணர்ந்திடுகென்றாள். (௫௫)

கண்டதுகான்முளைகண்புனல்சோரப்
பண்டிகொழுந்துபசித்தழலோடுந்
தண்டலிறந்தைதனைத்தழுவுற்றே
விண்டொலியின்றிவிழுந்தழும்வேலை. (௫௬)

வேறு.

நெடியவேணியனீறணிமேனியனீங்காக்
கடிகொள்கண்டியன்கண்ணுதருள்புணர்கருத்தான்
படிமையாலுயர்பண்ணவன்பல்லுயிர்புரக்கு
மடிகளாகியபராசரனணைந்தனனங்கண். (௫௭)

உணங்குசாலிகண்டுதவியவெழுந்தகாரொத்த
குணங்கொண்மாதவக்குரிசிலைத்தெரிந்துதண்கோதைப்
பணங்கொளல்குலாள்பராசரன்பாதபங்கயமேல்
வணங்கினளருண்மைந்தனுந்தானுமாய்மண்ணில். (௫௮)

சரணமேல்விழுந்தையறன்றுயர்த்தழல்சமிப்ப
வரணவாசிநீரருளினாற்றெளித்தளித்தறவோ
னிரணவேல்விழியாளைநீமதலையாரொவனோ
கிரணமாழ்குறுமிரவிபோற்கிடப்பவனென்றான். (௫௯)

வேளைவென்கொளுமெய்த்தவன்வினுவிடைகொடுப்பாள்
வாளைநேர்விழிமற்றவனென்மணவாளன்
காளைசந்திரகாந்தனெங்கான்முளைகதிர்கால்
கோளையாகியவம்புலிகுலேசனிக்கோமான். (௬௦)

வேந்தையீன்றவன்விக்கிரமாட்டியன்விருப்பான்
மாந்தர்சொல்பெயர்மனோசவன்மலர்த்திருமடந்தை
காந்தன்னவன்புலனிரண்டொருபொறிக்கவர்வோ
னேந்துமன்பதையிங்கெனைச்சுமித்திரையென்னும். (௬௧)

கோலபன்றனதுருவமாங்கொடுவினைவயத்தான்
ஞாலமுந்திருநகரமுநரபதியிழந்தே
பாலனோடுமென்னோடுமிப்படர்விடரிதன்கண்
மாலுடன்புகுந்துற்றனன்மைந்தனிவ்வைகல். (௬௨)

பற்றிநின்றெரிபசியினாற்றன்முகம்பார்த்துத்
துற்றிவேண்டுசொற்றுய்ப்பதற்குதவிடுஞ்சொன்றி
யற்றதன்வயிற்றழலிடையஞ்செவித்துளையா
லுற்றுவீழ்ந்துணர்வொடுங்கினனிறைவனென்றுரைத்தாள். *(௬௩)

நிமித்தமீதெனாநெடுங்கணீர்சொரிந்திடநிற்குஞ்
சுமித்திரைக்கெதிர்சொல்லுவான்பராசரன்றோகாய்
கமித்துநின்றிடுகளையெலாங்களைபடுங்கணத்திற்
சமித்துமோகமிங்கெழுவனோர்கலையிலுன்றலைவன். (௬௪)

வாடுறேலெனமனந்தெளித்தரிவையைமன்று
ளாடுதாணினைந்தருந்தவனரசனதாக்கை
யூடுதன்கையாலொருமுறைதடவலுமுணரா
வீடுகொண்டெழீஇயிறைஞ்சினான்பராசரனிணைத்தாள். (௬௫)

கழுமலத்தமிழ்ப்பிள்ளையார்கரதலந்தீண்ட
வழுதிதீப்பிணிமாற்றியன்றுயிர்பெறுவளம்போ
லெழுதருந்திறன்மனோசவனிருந்தவன்பாதந்
தொழுதுளங்கவர்களிப்பினாலவனொடுஞ்சொல்வான். (௬௬)

அறனிலாதவர்க்கரியநின்றரிசனமதனா
னிறனிலாவுயிர்நிலைகெடாதயர்வினைநீங்கித்
திறனிலாவுணர்வெய்தினன்சேர்ந்தனன்வனத்தின்
மறனிலாவுவேற்கோலபமாற்றலன்வலியால். (௬௭)

சத்திதந்தருடனயநின்றனதருட்கடைக்கண்
வைத்திடாவிடிலுய்கலன்மரபிதுவென்று
னத்துணைப்பொழுதஞ்சலென்றரசனையமைத்த
கைத்தலத்தினன்பராசரனருளினாற்கரைவான். (௬௮)

செல்வமன்னவகேண்மதிதெவ்வினைத்தெவிட்டி
மல்வளங்கெழுவாகுவின்வாகைநீமிலையு
நல்வரங்கொளுநடவையொன்றியம்புவனரலைக்
கல்வளம்பயில்கௌசலைகாளைதன்கரைமேல். (௬௯)

தாணுவாழ்வரைக்கந்தமாதனந்தனிலுண்டோர்
மாணுறும்பெயர்மங்கலதீர்த்தமாம்வாவி
வேணவாவுலகடைந்திடமிஞிலயிற்பிறந்த
யாணர்வல்லியோடிராமன்வீற்றிருப்பனுங்கென்றும். (௭௦)

சேயுநீயுநின்றேவியுமாயவண்சென்று
பாயுநீர்த்தடமன்பினுற்படிந்ததன்பாரத்
தாயநற்பதிச்சிராத்தமுன்னுணவையமைத்தாற்
போயொழிந்திடும்பொருகொடிநெடுங்கொடிப்பூவை. (௭௧)

அண்ணலானனவம்புயமாலயமாக
நண்ணுமாமகணண்ணலன்றனீனயுநாசம்
பண்ணிநின்பழம்பதிபுகுவாயுணைப்பகரும்
புண்ணியம்புணர்பொருட்டினுற்போதவன்யானும். (௭௨)

அல்லதீரியநம்மொடுமணைந்தொன்றறவோன்
வல்லமன்னன்முன்னேருடன்மங்கலதீர்த்தத்
தெல்லைநாடியேயேகுவானிருஞ்சுரம்போகித்
தில்லமும்பலதேசமுங்கடந்தவண்சென்றான். (௭௩)

மங்கலப்புனன்மரபினுன்மற்றவரோடு
மங்கலக்கணின்றகன்றிடவாடியேயருளாற்
றிங்கண்மூன்றளவிறைவனுற்சிராத்தமுஞ்செய்வித்
தெங்கணும்புகழ்பராசரனிருந்தனனிதன்மேல். (௭௪)

நீரொழுத்தெனநெடுந்துயர்நீங்கிடவிராம
னேரொழுத்திணையாசனஞ்செவித்துணையுரைத்தான்
போரொழுத்திகழ்புயத்தினன்புனலிற்புகன்ற
சீரொழுத்தைநான்கொருபதுநாண்முறைசெபித்தான். (௭௫)

அறைபுநன்மனுவரசனேர்பராசரனருளான்
முறையிலங்கெதிர்தோன்றினமுரண்கொள்கார்முகமுங்
குறையிலேமலிதூணியுங்குமுறுவெள்வளையு
மிறைசெய்தண்டமுமுசலமும்விளங்குமாடியமும். (௭௬)

பாகுநீள்கொடிபரியுடன்படர்நெடுந்தேரு
மீகையாலுறையிட்டகூர்நாந்தகமிரண்டு
மாகமார்தொடையாரமுமாயிரங்கணிலும்
வாகுசேர்மணிவலயமுமகுடமுந்தொடியும். (௭௭)

வைசயந்தியாம்பொன்மணமாலையுமருவார்
கைசயந்தராதோடவென்காண்பவன்கண்டே
யுய்சயந்தருமூழியுவகையுற்றேடி
மொய்சயந்தனக்குதவிடுமுனியுடன்மொழிந்தான். (௭௮)

அங்கண்மன்னனைப்பராசரன்முனபிடேக
மங்கலத்தடநீரினுற்செய்தருள்வழங்கப்
பொங்குபூணொடுமெய்புகுங்கருவியும்புனைந்து
செங்கைவாளொடும்வில்லொடுந்தேர்மிசையேறி. (௭௯)

தூங்கநாற்றிய தூணியன்முதுகிடைச்சுமந்த
வோங்குபொன்முடிச்சென்னியனுச்சியிற் கதிர்போ
லாங்கண்மேதகவிளங்கினனரசனன்றவர்க்குப்
பாங்குசேரருட்பராசரன்பின்னரும்பரிவால். (௮௦)

விரிஞ்சனுதியர்விசிகமேல்விடுதலுமீளப்
புரிந்துகோடலுமவையவப்பகுதியும்போற்றித்
தெரிந்திடற்கருங்கொள்கையாற்றிருவருள்செய்து
விரிந்தமாதவமேன்மையாலாசிகள்விளம்பி. (௮௧)

ஒன்னலன்றனைவென்றிகொள்போகெனவுரைப்பப்
பன்னரும்புகழ்ப்பராசரன்பங்கயபாத
மன்னனாகியமநோசவன்வலங்கொடுவணங்கிப்
பொன்னனாளொடுமானனன்றுநெறிடும்போனான். (௮௨)

விண்ணியங்குதேரிரவிதன்மெய்ந்நிழலேய்ப்ப
மண்ணியங்குதேர்மநோசவன்வளநகர்மருங்கிற்
கண்ணனம்புயக்கண்படுங்கடலெனக்காத்தி
லொண்ணிறங்கொள்வால்வளையினையூதினனுரப்பி. (௮௩)

கூற்றுவந்தனைப்புணர்ந்திடக்குறித்தகாளம்போ
லேற்றிடுஞ்செவிக்கோலபன்யாரெனாவிடுக்கண்
டோற்றுவெஞ்சினன்படையொடுமதிற்புறந்தோன்றி
யூற்றமோடுறுமநோசவற்கண்டமருழந்தான். (௮௪)

மூட்டுபோரெதிர்மூன்றுநாண்முயன்றபின்முன்னங்
காட்டிலோடியகாவலன்கார்முகந்துணித்துப்
பூட்டிநான்முகப்புங்கவன்பொருசரம்போக்கிக்
கூட்டுதானையுங்கோலபனாவியுங்கொண்டான். (௮௫)

மருவலானுயிர்மாய்த்தபின்மநோசவனென்னுஞ்
செருவலான்றனதணிநகர்சென்றுடன்றெரிந்தா
லருவலாவிடையவள்சுமித்திரையொடுமமர்ந்தா
னுருவலாநடைவருடமோராயிரமுவப்பால். (௮௬)

அற்றைநாண்முதலகந்தையும்பொருமையுமகற்றிச்
செற்றமின்றிநன்றுயிரெலாம்புரந்துதன்சேயைச்
சொற்றவாண்டவைசென்றுழிமணிமுடிசூட்டிப்
பிற்றையிற்றுறந்தேகினன்மதிக்குலப்பெருமான். (௮௭)

தேவிபின்வரமுன்புபோற்சேதுவைச்சேர்ந்து
வாவிமங்கலப்புனல்படிந்தநன் கரைமருங்கி
லாவியுள்ளுறைசதாசிவத்தண்ணலையறிவான்
மேவிநாள்பலகழிந்தபின்மநோசவவேந்தன். (௮௮)

சட்டகந்துறந்தெம்பிரான்சிவபுரஞ்சார்ந்தான்
மட்டுவார்குழன்மண்படமநோசவற்றழுவிப்
பட்டவிந்தனச்சேக்கையிற்பள்ளிகொண்டெழாளாய்ப்
பொட்டுவானுதன்மனைவியுமப்புரம்புகுந்தாள். (௮௯)

வேறு.

செருவினிற்பகைவென்றுலகேத்தவேசிவபுரத்தையடைந்திடவேற்றமார்
நிருபனுக்கருடந்தமைகேட்டிராவிலமுத்தியுமின்பமும்வேட்டுளோர்
மருவுமுத்தமமங்கலதீர்த்தநீர்மனம்வைருத்தியுமன்பொடுமாற்றிலா
விருபிறப்புடையந்தணிர்போற்றுவாரிருவினைக்கிரிநுண்டுகளாக்குமே. (௧௦

மங்கலதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௦௭.

---

# அமுததீர்த்தச்சருக்கம்.

---

வேதங்களைகண்டுவகுத்தவியாதனென்பான்
பாதங்கணினைந்துபணிந்துயர்பண்பினீடுஞ்
சூதன்பெருநண்பொடுபின்னருஞ்சொல்லுகின்று
னோதந்தவிர்மாதவர்தங்குழுவின்பமெய்த. (௧)

மாகாந்திவிளங்கெழின்மங்கலவாவியின்கண்
மோகாந்தகாரமுடிவெய்திடவூழ்குநல்லோர்
பாகாந்தகைமென்மொழிப்பங்கயப்பாவைசேரு
மேகாந்தராமநகரத்திடையேகுவாரால். (௨)

நாலார்கதியாருயிருக்கருணைக்கராளுஞ்
சேலார்நயனத்திருச்சீதையுந்தானுமாகித்
தோலாதவிலக்குமன்வாயுவின்சேயன்றன்முன்னும்
வாலார்நரர்சுற்றவிராகவன்வைகுமங்கண். (௩)

மின்றுருடலிற்றிரைவெண்ணணைவீவுநீக்குந்
தென்றாமுதத்தடமென்றொருதெய்வவாவி
யந்நீணைகாத்துளதீசனதாணையாலே
மன்றுதரவிற்படிவாருயிர்மாய்ந்திடாதால். (௪)

அற்பாலமுதத்தடமூழ்கடியார்களுக்குக்
கற்பார்மரணப்பெயர்க்கட்டினைநீக்குபாக்கு
நற்பான்மையதன்கணைநண்ணுவனாளுமுக்கட்
பொற்பாருமையம்பிகைதோள்புணர்பூதநாதன். (௫)

அவ்வாறுரையாடியசூதனையன்பினோக்கி
வெவ்வாதிகல்வென்றிகொள்வேதியர்மேன்மையாதோ
வெவ்வாறமுதத்தடநாமமியைந்ததென்றார்
செவ்வாறுணர்வார்க்கவனம்முறைசெப்புகின்றான். (௬)

ஆறுவமுதத்தடநாமமணைந்தவாறு
மாறுவதனீர்மையுமற்றும்வகுத்துரைப்ப
னூறுருயிர்வேறுணர்மாதவிருண்மைதேர்மின்
மேறுளிமையாசலமேவியசாரலின்கண். (௭)

நிலையாயுளஞ்ஞானநீதியினிலேவாய்மைக்
கலையார்புலமைத்துறைகண்டவன்காமமில்லா
னலையார்நியடக்கியவங்கையருந்தமிழ்த்தென்
மலையாசலமாதவர்கோனுடன்வந்தமேலோன். (அ)

எக்காலமுமுத்திரையைவெகியிருங்கடற்க
ணக்காலமிருண்டெமுமாலமையின்றவன்றுண்
முக்காலமுமர்ச்சனைமுற்றுபுதொண்டருக்கு
மைமக்காடவிப்பயனுண்டிவழங்கியன்பால். (கூ)

தாவாவிருபாலொருநான்கெழுத்தானமைந்த
மேவாமனுவாதியமந்திரமுன்னியின்பான்
மேவார்தராவாலுயபாவகைவேள்வியாற்றி
நாவார்மறைமோதிகலைக்கெழுதால்களாய்ந்து. (க0)

பிரமப்பொழுதத்திலெழுந்துபிராணையுன்னி
வாமுற்றிவிட்டிரர்வேதவழக்கிருத்துங்
கிரமத்திடையொன்றுழியாவகைகேடுமற்
சிரமத்தினையின்றியுளுற்றுசிறப்பினீடி. (கக)

மூண்டங்கியொர்மூன்றுமுறைப்புரிமொய்ம்பின்மல்கி
யாண்டின்வகையீன்றவர்தங்கள்சிராத்தநல்கி
வேண்டும்பரிசேனவுமேதகவேயியக்குப்
பூண்டங்கருணைன்னெறியிவ்வகைபோற்றுநாளில். (க௨)

ஞாயிரம்வற்சரமாகியுமம்பருய்யக்
காரார்விடமுண்டருள்கண்ணுதனல்கநல்கா
வேரார்பசையுண்டெரிவெம்முதிர்வேனிறன்னிற்
பாருடமாடியுண்விரல்பற்றலுன்றி. (கங)

நின்றங்கலையாவகைவையத்தெருப்பிருப்ப
னென்றங்கிருகண்கொளவங்கயெறித்துநக்கன்
பொன்றங்கடியல்லதுசார்பிலன்போற்றிநானு
லன்றங்கருமாதவமாயிரமாண்டினெல்லை. (க௪)

செல்லார்மலயத்தவன்பின்வருசெம்மலாரு
நல்லானிதுசெய்வுழிநாரியொர்பாகமாகி
யெல்லாவிமையோர்களுமேத்திடவேதுதைத்துக்
கல்லாலின்முன்மேவியகண்ணுதல்கண்முனின்றுன். (கரு)

அப்பெற்றியினோர்படைகண்டவருந்தவத்தோ
னைப்பெற்றியினோர்களுமெய்சருமெய்ந்தையெம்மா
னுப்பெற்றியசுந்தரமேனியுவந்துநோக்கி
மைப்பெற்றிருள்கண்டனைவாழ்த்திவழுத்துகின்றுன். (கசா)

எரிநேத்திரமிக்தவெழுங்கதிர்நோக்கமென்றும்
திரிநேத்திரநிங்கண்பிலைச்சியசென்னிமன்ற
வரிநேத்திரவம்புயமார்கழலண்ணன்மஞ்சார்
கிரிநேத்திரமாமுமைகாதல்கிளைத்தகேள்வா. (கஎ)

கோளால்வருகூற்றையுதைத்துயிர்கொண்டவென்றித்
தாளாகனகச்சிலைதாங்கிவளைத்தெடுக்கும்
தோளாவயனுச்சிதுமித்தவுகிர்க்கூர்க்கை
வாளாவிளையூழ்முறைநாடிவழங்குவள்ளால்.

அளவின்றிநெருங்குசராசரமாகியெங்கு
முளவென்றிடுமாருயிருக்குயிராகியொன்றுங்
களவென்றவர்காண்பவரன்றவர்காணலன்றும்
வளவென்றிகொள்போர்மழுவாட்படைவாணனாதா.

உழையேந்தியகைத்தலபூண்முலையொண்டழும்பொ
டிழையேந்தியமார்பகவேடுவனிட்டபச்சைத்
தழையேந்தியசேகரசங்கரதன்கரத்திற்
கழையேந்தியவேளுயிர்வௌவியகண்ணனீறுதே.

நேசங்கெழுதொண்டர்கணெஞ்சகநீங்கலில்லா
வாசங்கெழுபூரணஞானம்வயங்குசோதி
நாசங்கெழுநான்முகன்வெண்டலைநாமமாலைத்
தேசங்கெழுமூர்த்தமிலிங்கியதேவதேவ.

நாணுதயனோடரிதங்கனிணதென்றே
வீணுதரவுற்றிகலாடியவேட்கைதீரத்
தாணுர்பதுமத்தனிமாமணித்தோற்றமென்னச்
சேணுடகடந்துவிளங்குஞ்சிவக்கொழுந்தே.

அற்றம்பலவாயினுமன்புடையார்கடம்பாற்
குற்றம்பலமாகியிடாதருள்கோதிலானே
யுற்றம்பலர்கண்முகிழாதவருள்ளமன்றிச்
சிற்றம்பலமீதினுநாடகமாடுசெல்வா.

கனிகந்தநுகர்ந்தமர்காதலின்மாதவத்தோ
ரனிகந்தொழுதண்கயிலாசவடுக்கலானே
வனிகந்தவகன்றவானதிவைத்துவைகுர்
முனிகந்தனைமுந்தொருநந்தனையீன்றமுத்தா.

ஆய்வாரருவோடுருவன்றியகண்டமாகி
மாய்வாருடலென்புனிமாலைவயங்கவாடற்
பேய்வாழ்சுடலைபயில்பிஞ்ஞகபேதைவாழ்க்கை
யோய்வாருயிருண்டவர்போறவோங்குமூர்த்தி.

ஒன்றேயெனிலங்ஙனமோதியதொன்றுகாட்டி
யன்றேயெனிலொன்றலவாகுதியாரளப்பார்
குன்றேயருண்மூன்றுருணைத்தருணங்கடந்த
நன்றேயெனையாளுதிவேண்டலன்றாவவாழ்க்கை.

பொன்னங்கழல்வாரிசநாண்மலர்போற்றிபோற்றி
யென்னன்புனையெங்ஙனமெய்திடுமென்னலோடு
முன்னின்றருண்மூவிலைவேற்படைமுக்கண்முன்னோன்
றன்னன்பனையன்பொடுநோக்கினன்சாற்றுகின்றான்.

ஆயினரவையினுள்ளோரஃதுணர்ந்தடவிராம
னேயெனச்சீறிவல்லேயிருபிருகுடிமுரிப்பார்
லோயெனக்குறிப்பினார்க்குமுதநிலையையிறுத்தானத்தான்
மேயதேகாந்தராமவிழுப்பெயரப்பதிக்கே.

பூணுலாந்தோளயோத்திப்புரவலனாணைபோற்றிச்
சேணுலாந்தரங்கமின்றிச்செழுங்கடலமைந்ததன்மை
காணலாமின்றும்வீரர்கற்பனைகடக்கலாமோ
மாணிலாவெளியசங்கமரீஇப்பெரும்பயமுற்றோற்கே.

வேறு.

நியதியோடமுதத்தடமூழ்கியேயிலைக்கோசலைபுத்திரனாநியோர்
பயிலுவாரைவழுத்தினர்தாமெலாம்பரமயோகபதத்தினைமேவுவார்
பெயர்விலாநிலைபெற்றிலர்மாலுளார்பிரமஞானமணத்திலராவரே
ஐயருமாதரவிற்படிவார்களேயுதுகபீசவருக்கருளியுமே.

அமுததீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௬௪.

# பிரமகுண்டச்சருக்கம்.

பண்பெருகுமாதவர்பணிந்தினிதுகேட்பக்
கண்பிறழ்வில்சூதமுனிகட்டுரைசெய்கின்றான்
மண்புகழுமாரமுதவாவியதன்மாடே
யொண்பிரமகுண்டமெனவுள்ளதொருதண்ணீர்.

ஆரமுதவாவியிடையாடினவிராம
னோருமுறைமந்திரமுவந்துநிலைபோற்றி
வீரமலியைந்துபுலவேடமுருக்கிப்
பேருணர்வினுடிவர்கள்பின்பிரமகுண்டம்.

வீங்குகந்தமாதனவிலங்கலதனூடே
தேங்குதிரைமுத்திலகுசேதுவதனுப்ப
னோங்கிவருநல்குரவினுக்கொருமருந்தா
யாங்கதுவிளங்குமுலகத்தனையுமேத்த.

அன்றியஃதாயுமறையந்தணர்கடம்மைக்
கொன்றவினைகோடிபலகோடிதுகளாக்கு
மன்றவதுகண்டளவில்வல்வினைகளெல்லா
மொன்றொழிவதன்றியழிவுற்றகலுமெல்லே.

கோகனதமார்பிரமகுண்டமதுகண்டோர்
சேகுறுதவங்கவிகைதெள்ளுபுனலாடல்
யாகமிவையெண்ணிலவிழைத்தடைவதென்றே
போகுமொருகான்முழுகினோரிபுரத்தில்.

கொற்றமலிசீர்ப்பிரமகுண்டமதில்வெண்டூ
ணெற்றியிசையாரொருவரிட்டவர்சிதைத்தே
மற்றவர்வயத்தினிலேவாராயனுமாலும்
வெற்றிபுனைவெள்ளிவிடைவேணிமுடியானும். (௬)

கொத்தவிழ்மலர்ப்பிரமகுண்டமணிநீற்றுன்
மத்தகமிலங்குதிரிபுண்டரமலிந்தோர்
முத்தரிதிலையமிலைமுன்னுடையமானு
வைத்தனையதிற்புனைருவாரமலராவார். (௭)

கொய்குழைவுதண்பிரமகுண்டமதினீற்று
லங்கமறைபப்புனையுமன்பரவர்பெற்றைதச்
சங்கரனைனாக்தனைசெய்தன்மையுடையாரே
விங்கிதிலைநேருவிரண்டுமென்னைமுடியாதால். (௮)

குற்றமுடலைப்பிரமகுண்டமதினீற்றுன்
முற்றுமறையாருதன்முயங்கவணியாதா
ரற்றுமலமாரவுரைத்தினிடையாழ்வா
ரெற்றமனைம்புவியிரண்டுமுளவெல்லை. (௯)

இந்தமணிவெண்டுகளிருக்கவொருநீற்றைப்
புந்திபுரிவோர்களொருபோதுமணியாதார்
சிந்தைதுறைமெயாப்புமையிகழ்ந்துமவர்சேர்வில்
வந்தவொனத்துணிவர்மானமுணர்தக்கோர். (௧0)

குல்வுதவுகோண்பிரமகுண்டமதில்வெண்டூள்
சைவநெறிவேதியர்தமக்கருள்செய்வோரா
விவ்வலையனாலமுழுநீற்றமாயிற்று
லவ்வகைகயிலோர்விதிதுறைமையபிலையம்மா. (௧௧)

இம்மெனவெவிண்காமெறிந்துணைசெய்பின்றேன்
மெய்ம்மையமிதுமெய்ம்மையமிதாநீண்டுமிதுமெய்ம்மை
கொய்ம்மணமலர்ப்பிரமகுண்டமுறைநீற்றைத்
தம்மையுணர்மாதவர்தரித்திடுமினீரும். (௧௨)

மாதில்தந்தமாதனைவணக்கவிறைசாபம்
பாறவினைமேயார்களெதிர்பங்கயனிறைத்தான்
வீறுபலவேள்விகள்விதிப்படிவிளைத்த
சீறிஃதவ்வாவிருடைவார்விமலராவார். (௧௩)

தொன்மையமிதுருதமுனிசொல்லியிடுமெல்லை
புன்மைதவிர்மாதவர்புகன்றுவிடைகொள்வார்
நன்மனைவியாதனருணம்பியையழுத்தா
வன்மைபுரிசாபமதுவந்தவகைகேட்பார். (௧௪)

மேதினிபடைத்தருளும்வெண்ணிறமடந்தை
காதலனையாதுறைகண்டிறைசபித்தா
னேதமிருசாபமஃதென்னமாயிற்றே
றோதவருளென்னவவனுள்ளபடிசொல்வான். (௧௫)

முன்புகறைமுண்டகன்முகுந்தனிவர்தம்மின்
மன்பதைபுரக்குமுதல்வள்ளலொருவன்யான்
பின்பிறரிலென்றிகல்பெருக்கியெதிர்பேசி
யன்பறமுரண்டனரழுக்குடைமையாலே. (கசு)

வேலையதின்மின்மினியிரண்டுடன்வெறுக்குங்
காலையுதயந்தருகதிர்க்கடவுள்போலு
மாலையிருதாரகைமனப்பகைகொளுங்காற்
பாலையுறழ்வெண்மதிபடர்ந்தசெயல்போலும். (கஎ)

வேளிருவோர்தமில்வெருண்டமர்தருங்கா
லாளுமனுவேந்தவணைடைந்தமுறைபோலுந்
தாளுடையிரண்டுதகர்தம்மிலமராடு
நாளிலொருபோரிடபநண்ணியதுபோலும். (கஅ)

மாயவிருவோரிசன்மதர்ப்புமதிமாழ்க
வாயவர்தமக்கறிவுமன்புமுளவாகப்
போயளவிலண்டமிசைபொங்குதழல்வண்ணத்
தாயசிவலிங்கவொளிதோன்றியதுமுன்னர். (ககூ)

ஏமமுதலாளியையிகந்திருவர்காப்போர்
தாமொருவர்வவ்வும்வகைதம்மிலிகல்காலைச்
சேமநிதியாளனிடைசேர்ந்தனையதெய்வத்
தாமவருண்மேனியதுதன்னையவர்கண்டார். (உ0)

கண்டதிசயத்திறைருகாட்சியினினைத்தார்
தொண்டுடைமுதற்பரமசோதியெனவென்றார்
கொண்டுளமருட்கைகினைகொண்டெழுதலாலே
மிண்டுடனகந்தையும்விடுத்திலிசைப்பார். (உக)

அண்டரினமக்கதிகராயினவரின்றால்
விண்டெவருரைப்பவர்கண்மேன்மையிவர்பாலென்
றெண்டகரவீறுமிதுவேயஃதளக்குந்
தண்டமுநிறுக்குமிருதட்டுநதராசும். (உஉ)

ஆதியிஃதந்தமிஃதென்னவரிதாகி
வீதிதருதேரிரவிவேறுபலகோடி
தீதிராறும்படிவுசின்னமுறவீறுஞ்
சோதியையளக்குமிதுவேகமதுதோற்றம். (உ௩)

என்றுமிருபித்தரஃதெய்திடுமுன்னெஞ்சத்
தொன்றியமறைப்பழுதனைத்திடுதல்போலே
யன்றைவரைதாம்வெளிவிடாதுளமடக்கும்
புன்றவைமைவானவர்புலங்கொளவகுப்பார். (உச)

தேவரிதுகாண்கவெனமெய்ப்பொருடிரிந்தார்
மேவுகிலையமும்வீகற்பமனமுற்றார்
யாவரிதனீறுமுதலெண்ணியளவிட்டா
ராவரவரேபிரமமாகுமுதலென்றார். (உரு)

தாடலையிரண்டின்முடிதானயனுணர்ந்தா
ருடுமிவனைத்தனதுநாபியினளித்தோன்
றேடலிலனேவடிதெரிந்துணர்வதுண்டென்
றுடகிலத்தவருமையுறவினின்றார். (௧௬)

அடிக்களவையுற்றிலதகழ்ந்துபிலமெங்கு
நொடிக்கிலிவனென்னின்மிகநோன்மையுடையானே
முடிக்களவையுற்றதெனமுண்டகமிருந்தோன்
வடிப்பதெனமாயமெனமாயனுமருண்டான். (௧௭)

புன்னிலைதருங்கொடியபொய்யிதுபுகன்றே
னெந்நிலையதாகுமெனவெண்ணியயனோங்கு
மந்நிலையழற்படிவின்றுமருளாலே
தன்னிலையளப்பரியதாணுவெளியானான். (௧௮)

வேறு.

துளங்குமிளம்பிறையொளிர்ச்சடாடவிவெண்டிரைவீச
விளங்குமரனடிவிருப்பவிமையமயிலிடங்கொள்ளத்
துளங்கொணாவுந்துணரிதழித்தார்மார்பன்றனிவிடைமேல்
விளங்குதலுமிருவோரும்வெள்கிமுகங்கவிழ்ந்திட்டார். (௧௯)

புத்தேளிர்கணந்தொழுதுபோற்றிசைப்பப்புண்டரிகன்
பித்தேறுமுகந்தெரிந்துபிறைமவுலிமுறுவலுடன்
போய்த்தேசொற்றனையெம்முன்பூசையுனக்கெஞ்ஞான்றுந்
தத்தேறுந்திரைத்தரணிதனிலிலதாகெனச்சபித்து. (௨௦)

நெடியவனைமுகநோக்கிநீசாதம்புகன்றமையாற்
படியவர்கின்பாற்புரிகபரவுபெரும்பலியெனவு
மடிதொழுதுமலர்விரிஞ்சனனாவிலருட்பெருமானை
கொடியபிழையொன்றுமுனங்கொண்டுபொறுத்தருளென்றான். (௨௧)

நம்பனயன்றுயர்க்கிரங்கிநல்லருள்கூர்ந்தெமதுமொழி
வம்புபடாதுயர்கந்தமாதனத்தின்மருங்கேகித்
தம்பநெடுந்தழற்சாலைசமைத்துமகம்பலதந்தாற்
செம்பதுமத்தவநீருஞ்செப்பியபொய்ப்பாவமறு. (௨௨)

பருவமுகிற்படாம்போர்த்தபனிமலையின்மிசைவளர்ந்த
தருணமலர்க்கொம்பினொடுந்தவளமதிதவழ்மவுலிச்
சுருதிதொழும்பரன்கரந்தான்சொன்னமுறையிழைப்பதனைக்
கருதியயன்காருத்தன்கண்டகரைவரையடைந்தான். (௨௩)

அக்கினியிலமரர்முனமாயிரமெண்பஃதாண்டு
மிக்கபவுண்டரிகமுதல்வேள்விகளாலருச்சித்தா
னக்கணையங்கெதிர்தோன்றிநாயகனுநான்முகற்குப்
பொய்க்கிளவிப்பவம்போக்கிப்புனிதவரம்பலதருவான். (௨௪)

உருவதனிற்பூசையிலையுயர்சுருதிமிருதியினுற்
றிருமறையோர்பாவனையாற்செய்கவுனைவழிபாடு
இருதுவிதுசெய்யுமிடங்களுலகமொருமூன்றும்
பிரமகுண்டமெனப்பெயராய்ப்பிறங்கியறங்கொடுத்திடுமால். (௨௫)

நீயிழைக்குமகத்தடத்தினீர்படிவார்க்கருண்முத்தி
வாயிலிடுந்தாள்கழலுமந்தகத்திப்பொடிபுனைவா
ரோயெனமைப்படலமிரித்தின்புறுவரிடுவதில்லான்
றுயைமணம்புணர்கொழுநன்றனக்குறித்தான்றுனல்லன். (சசு)

ஆரொருவர்குடைந்தாலுமயுதபஞ்சபாதகம்போஞ்
சேரவனுகாவலகைதிரள்பூதமெனவருளி
யீருமழுவினன்மறைந்தானென்றுமவனுறைந்தார்கள்
காருலகந்தான்மகிழுங் கண்ணெனவிண்ணவர்பிறரும். (சஎ)

வேறு.

மாபிலஞ்சிமுடித்தயனூரிலேவனிதைபங்கனருட்கொடுபோயினன்
பாவமன்றுதொடுத்திமையோர்கடாம்படிவாங்கண்மகச்செயல்பேணினர்
காவஞ்சஞ்சலமுற்றவுநாதியேகதிவழங்கும்வழுத்திடயாருமே
பிரமனன்பினிழைத்திடும்வேள்வியாற்பிரமகுண்டமெனப்பெயரானதே. (சஅ)

பிரமகுண்டச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ககரு

---

# அனுமகுண்டச்சருக்கம்.

---

காலாரணவிலையிட்டவனல்குறுங்கிளர்குந
ஞாலாருமனுடையார்முகநோக்குற்றனனுவல்வான்
கோலாகலவண்டார்விதிருண்டங்குடைவுற்றோர்
வாலார்விறலனுமானருள்வளர்குண்டமதடைவார். (க)

செருமாறெழுதிருசுத்திரன்றிதறப்படைபொருதே
கருமாமுகில்வணன்சீண்டிடுகொலைக்கிளர்கந்தப்
பெருமாதனவனமானவர்பேசும்பெயர்தனதா
வொருமாதடமடன்மாருதிகண்டானுலகுய்ய. (உ)

அதனீர்மையையறிவுற்றானகலானவனமர்வா
னிதனீர்படிபின்றூர்புகுமிடமேபிவலோக
பதமாமிருணிராயப்புவிபாழ்பட்டனபயனன்
சதுமுலிங்கமுண்டாகியபின்னென்பலசொல்லில். (ங)

மூன்றுனிஅபோதலுந்தடமொழிதந்திலன்முனிவீர்
பின்றுனிஅகிகரும்புனல்பேசாதஅசாத
பின்றுவினையடுநற்றடமிதன்மேன்மையையெரிவெற்
பன்றுனறிவுறுவானஃதறியானெனலாவான். (ச)

வயமாருதிதடமாடினன்மன்னன்றருமசுத
னுயர்கேகயகுலமோங்கிடவொளிமைந்தரையுற்றுன்
சயமாரவர்தொகைநாலொருசுதமென்றருள்குதன்
புயமாணிறைசெயல்கேட்டிடுமுனிவோரொடுபுகல்வான். (ரு)

அணிகேகயமரபுள்ளவனரசன்றருமசகன்
பணிமேனிலமுழுதும்பகைபடவென்றினிதாள்வான்
றணிவானிகலுயிர்மேலருடவமுமொழியறமே
துணிவானவனிருதோள்புணர்தூயார்தொகைநூழல். (சு)

தளர்நேரிடையவருத்தரதாராகணமனையார்
வளர்கேகயகுலமுய்ந்திடவடமென்றளிருந்திக்
களர்மாநிலமெனமன்னியகருவுற்றிலர்களிவண்
டேளர்தாரவனவர்பான்மகவுளதாநெறியுறுவான். (எ)

மாமேதமுன்மகமுள்ளனமருவுந்துலையாதி
யாமேவருகொடைதென்றிசையவர்பூசைகளலைசூழ்
பூமேவியசுரருண்டிகள்புதல்வற்பெறலுதவு
நாமேவியமனுவேபலநாளும்புரிகுற்றான். (அ)

முதிர்வெய்தினனதுபோழ்தினின்முதல்வன்றருமசகன்
வெதிர்தோள்புரையரசன்மனைமின்னார்களின்முன்னாந்
கதிர்மானகிலவளின்றனள்காதன்மகனும
மதிர்வார்கடலெழுமென்றுறழவிர்சந்திரனறவீர். (கூ)

நித்தன்சடைபுனைசந்திரனிகர்சந்திரனவனும்
வைத்தந்தியிலருடாயெனமனநன்பொடுமற்றைக்
கொத்தொன்றியகுழலன்னையர்குழுவுங்குயமுறுபா
லுய்த்தங்கெழில்பெறநல்கிடவொளியால்வளர்வுற்றான். (கo)

தாய்மாரவர்தங்கட்கிருதடவாள்விழியானன்
பாய்மாவுடைமன்னற்குயர்பணிவன்புயமொத்தா
னய்மாமதியேனுதியரவர்சூழ்துணையதுவாய்ச்
சேய்மாநகருள்ளார்பெறுசெல்வநிகர்செல்வன். (கக)

வேறு.

பாலத்தூரியசீராட்டுப்பண்ணியரசன்வளர்த்திடுநாட்
கோலத்தளிமந்தனிற்றுயிலுங்குலமாமதலைகொழுங்கமலக்
காலிற்றெறுக்கான்முள்ளூறுத்திக்கடுவுற்றிடலுங்கலங்கியெழுந்
தோலிட்டழல்கேட்டன்னையர்தாமுள்ளம்வெருவியுடனழுதார். (கஉ)

ஏங்கியழுதகுரலொலிகேட்டிறைவனமைச்சர்புரோகிதரோ
டாங்கணொருவனறிவானையனுப்பவவன்சென்றகன்கடையை
நீங்கலரியபண்டகனேர்நின்றுவினவவவனுரைத்தான்
றேங்குகுதலைமொழிமைந்தன்றேளால்வருந்தவழுதசெயல். (கந)

போனான்பறப்பன்முள்ளுறுத்திப்புதல்வன்பதைப்பப்பொழுராகி
மானார்முழுதறிமனைத்தும்வந்துபுகன்றான்மன்னனுடன்
றூநான்மறையோருடன்றேர்ச்சித்துணைவர்தொடரத்துணைவோடுந்
தேனுரலங்கற்றருமசகன்றிருமாளிகையுட்சென்றடைந்தான். (கச)

செறியும்பிடகரவர்தம்மாற்றேள்வெங்கடுத்தீர்மருந்துதவி
யறியுமகவைக்கொண்டாடியங்கையேந்தியணைத்தன்பா
னறியதுகிலும்பசும்பொன்னுநலங்கொண்முத்துநல்குரவு
மறியவழங்கிமருத்துவர்க்குமன்னன்மகிழ்கூர்ந்ததற்பின்னர். (கரு)

ஏகிப்புறத்திலரியணைமேலிருந்தாரணனையெதிர்நாடி
யூகித்துரைப்பான்யார்க்குமகவொன்றுமதனிலஃதின்றே
யாகிவிடுதனன்றுகுமன்றேல்விளைக்குமருந்துயர
மாகமருங்குனூற்றுவனைமணந்தேனொருவன்மரபதனால். (கசா)

ஆனேன்விருத்தனிங்கெனக்குமரிவைமார்க்குமொருமைந்தன்
றானேயுயிராமவனிறந்தாற்றனைவாழ்விழத்துமெல்லோமு
நானேரிடையார்நூற்றுவர்பானாறுமதலைப்பெறுகப்
பானேர்சுருதிநிலைதுணிந்துபகர்வீர்விதிநூற்பரிசுணர்ந்தீர். (கஎ)

செப்புங்கருமம்பெரிதெனினுஞ்சிறிதேயெனினுஞ்செய்திடுகேன்
றப்பின்றுணைதருமமிசைத்தருகேன்மகவுசதமுண்டா
மப்பண்புடையபணியுண்டேலருள்வீரொன்றுனடல்வேந்த
னொப்புங்கருத்தாலவொல்லாமுணர்ந்தாரரசற்குரைசெய்வார். (கஅ)

தேர்ந்தோமுரைத்துமன்னவகேள்சேதுவடிவாய்த்தென்கடற்பால்
வார்ந்தவருவிமருங்கொலிப்பவயங்குங்கந்தமாதனந்தான்
கூர்ந்ததடமொன்றதன்பாங்கர்க்குலவுமனுமகுண்டமென
நேர்ந்துமுனிவரமரர்பிறர்நெருங்கியதனைவணங்கிடுவார். (ககூ)

தெரிசித்தாலுமத்தடத்திற்றெய்வப்பாணிபாணியினிற்
பரிசித்தாலும்பவந்துரக்கும்படியின்மிடியும்பழங்கண்ணுங்
கரிசிற்சிறந்ததீநரகுங்களையுங்காட்டுங்கதிவேண்டில்
வரிசைக்குலநன்மடமாதர்மைந்தர்முதலாம்வரநல்கும். (உ0)

வாஞ்சையுதவுமதின்மூழ்கிமக்கட்காமமகம்புரிந்தாற்
றேஞ்சொன்மடவார்நூற்றுவர்க்குஞ்செம்மலுளவாமென்றிசைத்தார்
பூஞ்செங்கதிர்வேற்போர்வேந்தன்புரிவானிருதுபுகழ்மறையோர்
தாஞ்சென்றிகலும்படையமைச்சர்தம்மோடனுமான்றடம்புக்கான். (உக)

புகுந்துதனதுமனைமடவார்பொருநர்முதலோர்பலரோடுந்
தகுந்தண்புனிதத்தடமூழ்கித்தனயர்க்காமத்தழல்வேள்வி
யுகந்தபொருளோடுபகரணமொருங்குசேர்த்தியொருதிங்கண்
மிருந்தவிருப்பானவரோடும்வீற்றங்கிருந்தபின்வேந்தன். (உஉ)

மேடமாதந்தனிலிழைத்தான்விளம்பும்வேள்வியதன்கணைமேற்
றேடுஞ்சிறிதுமணுகாமற்சுருதிமுறையின்றுறைமுடிவு
கூடவமைத்தவாசிரியன்குவியாமகஞ்சேரவியுணவின்
சேடமதனைத்தேர்வேந்தன்றெரிவைமார்கடமக்களித்தான். (உங)

பின்னருரியமாதருடன்பிழையில்வேள்விமுடிவதனிற்
சொன்னமுறையினீராடித்துகடீர்குரவர்தமக்குதவிப்
பொன்னுமணியும்பூசுரர்க்குப்பூரிகொடுத்துப்புலம்பலவு
மன்னன்வழங்கியனைவோரும்வாழ்த்தவடைந்தான்வளநகரில். (உச)

வையம்புரந்தங்குறைநாளின்மருவுமாதமொருபஃதிற்
றையலார்களொருநூறுதனயர்ப்பயந்தாரவர்தமக்குச்
செய்யும்பிறவிவினைமுடித்துத்திலமும்பசுவுஞ்செழும்பொன்னும்
பொய்யில்புவியும்பூசுரர்க்குப்புகழ்க்கேகயர்கோன்புரிந்தளித்தான். (உரு)

மகவோரிரண்டாமுன்னவட்குமற்றையவர்கட்கோரொன்றாந்
தொகையாலொருநூற்றொருபுதல்வர்தோற்றம்பெருகவளர்ந்திளமைத்
தகையார்பருவமணைந்திடலுந்தரணியதனைத்தானென்று
மிகையார்நூறுகூறுக்கிவேந்தன்விருப்பாலவர்க்கீந்தான். (௨௬)

கோற்றேன்மொழியாருடனனுமகுண்டமணுகித்தவம்பன்னா
ளாற்றுவரன்றனிணைகருதியாவிதுறந்தான்றருமசுதன்
வேற்றுரையருமுடன்விளிந்தார்மிக்கபுதல்வன்சந்திரன்று
னீற்றார்தினந்தொட்டவர்க்குரிமையிழைத்தான்பிராத்தமீறெவையும். (௨௭)

வேறு.

எழில்வைகுண்டமடைந்தனன்மாதரோடிறையதன்பினர்சந்திரனுதியோர்
பழுதின்மொய்ம்பொடுமுன்பகிர்பாரொலாம்பகையொழிந்தபுரந்தனர்காதலோமே
யழிவறும்புகழ்மன்செயலோடுநீடனுமகுண்டமதன்றனைக்கூறினோ
முழுகுமின்கணலம்பெறநாடுவார்மொழிதருங்கதையும்பரிவில்வாழ்வரோ. (௨௮)

அனுமகுண்டச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௦௨௯.

---

# அகத்தியதீர்த்தச்சருக்கம்.

---

நிதியமலைமிசைத்தவளநெட்டெயிறொன்றினைமுறித்துமிருந்தன்பாற்செல்
வதியமலைமகனெழுதப்பாரதநூல்வகுத்தவன்றன்மாணாக்கன்றூய்
துதியமலம்புலன்முனிந்தசூதமுனிமுனிவரர்க்குச்சொல்வான்றென்னூற்
பொதியமலைமுனிதீர்த்தம்புகுவர்முதலனுமகுண்டம்போற்றுமேலோர். (௧)

பைந்தமிழ்மாதவனமைத்தபட்டமிதுமேருவுடன்பண்டைநாளில்
விந்தகிரிமிகவிகலிவிண்ணொடுமண்புதைப்பவிடம்விடுமுச்சின்றி
யந்தமுயிர்களுக்குறலுமறிந்தமரர்கயிலைமலையணுகியன்னாற்
கிந்தவகைமுழுதுமடைவினிலியம்பியிருசமற்காலிறைஞ்சினின்றார். (௨)

மஞ்சுமலிவரையணங்கைமணம்புணர்வான்விருப்பினொடுமவிட்டனுகித்
தஞ்சமறைமுனிவரரைத்தடஞ்சிலம்பன்பால்விடுத்துத்தசும்பின்சேயை
நஞ்சுபொதிகளன்விளித்தாநீயணுகிவிந்தகிரிநளிநீக்கென்றான்
செஞ்சொலருந்தமிழ்முனியன்சிவபெருமான்கழல்வணங்கிச்செப்புகின்றான். (௩)

குருகுபுனைகரத்துமையைவேட்டருணின்மணவாளக்கோலங்காணு
தொருதமியேன்புரிந்தகொடுந்தீங்கெவனோவெனவெருக்கொண்டொப்பவீசன்
வருதியெனமருங்கழைத்துமணமிங்கேல்வண்ணமிதுமறைக்காடென்னும்
பொருவினகர்தனிலுனக்குக்காட்டுதும்யாமுண்மையிதுபோதியென்றான். (௪)

விடைகொண்டுவிடையவன்பால் விரைந்துசென்றுதென்றிசைப்பால்விண்ணுமம
ண்ணும், புடைகொண்டுவளர்விந்தப்பொருப்பதன்மேற்றிருப்பதமென்போதருட்
டிக்,கிடைகொண்டநிலத்தளவுங்கீழ்ப்படுத்தியிடம்பலவுங்கெழுமியெல்லைத், தடை
கொண்டுவளர்கந்தமாதனத்தின்றலையணைந்தான்றமிழ்நர்கோமான். (௫)

பிறங்கலதன்பெருமையுணர்ந்தாயிடைத்தன்பெயராற்பெருந்தண்வாவி
யறங்குலவவருள்புரிந்தான்றுமவண்வீற்றிருக்குமந்தீர்ப்பட்டந்
திறங்கெழுமுக்காலத்துஞ்சிறப்புடையதிவ்வுலகிற்செல்வங்கல்வி
நிறங்கலவாவீடுதருமற்றுநினைந்தனவுதவுநிகர்வேறின்றால். (௬)

சுனையதனிற்றீர்க்கதமன்றருபுதல்வன்கக்கீவான்றொல்லைநாளி
னனைதருநல்வினைப்பயனாற்சுவநயனுமன்னனருணையுமென்கூந்தற்
புனையிழையைமணம்புணர்ந்தானவன்சரிதந்தருந்தருமம்புகரின்றுக்கு
மனையகதைதவிர்த்துறைவன்மனநிறுவியறிந்திடுமினறத்தின்மிக்கீர். (௭)

ஏர்க்குமருந்தவமுயலுமியல்புடையானந்தணரிலேற்றமிக்கான்
றீர்க்கதமனவன்குமரன்கக்கீவானுபநயனச்செய்கைமுற்றிப்
பார்க்குறுயர்புகழ்ப்பிரமசரியநிலைவழுவாதபண்பினீடிக்
கூர்க்குமதிமறைதெரிவானுதங்கனெனுங்குரவனிடங்குறுகினானால். (௮)

குறுகிமறையதனங்கமிருமூன்றுசாத்திரங்கள்குலவுந்தொன்மை
யுறுகதைகளிதிகாசமுயரிடதமவைபிறவுமொழிபிறேறு
மறுபஃதாண்டாசிரியன்மனநிலையிற்பகுத்துணர்விறுய்ந்தபின்னர் [வான். (௯)
மறுவில்பொருள்வளநகர்ப்போய்க்கொணர்ந்தாசான்றிருமுன்னர்வைத்துச்சொல்

இதுமறைமுதலனைத்துமுதங்கவுனதருளாலுணர்ந்தேனவில்லிற்
போதல்புரிகின்றனனம்விடைதருதல்வேண்டுமெனப்பொருவிலாசான்
காதலனன்றேருதியின்கடிகொண்மணமுடிவதற்கோர்கருமந்தொல்வேந்
சேதுவின்கண்ணுயர்கந்தமாதனத்தின்மலயமுனிதீர்த்தமுண்டால். (௧௦)

வீடுதருமுதவுதவும்வினைகளையுமத்தடத்திஸ்விதியினாலே
யாடுதிநீமுப்பொழுதுமாண்டொருமூன்றதன்கரையப்பாலாண்டிற்
கோடொருநான்குளதாகிச்சாற்காலமுகிற்குலம்போற்கொழுங்கால்வெள்ளைப்
பீடுடையமேருவெனவிறைகயிலைநடைபயின்றபெற்றித்தென்ன. (௧௧)

அடியிதெப்பிறவிதுமியாற்றுவக்குன்போதைந்தோராவதா
னெடுநிகளச்சங்கிலிபோலிர்ப்புண்டிடத்தலையாண்டவாலைப்
படியிசையுமிலைறங்கும்பாற்கடலிற்றோய்த்துவிற்பாக்கவீசிப்
பொடியிழிவின்பிரண்டப்பித்திசையத்தனதபாப்புறத்திற்றோய்த்து. (௧௨)

புழைக்காத்தால்வின்முகடுபொள்ளலபடவுரிஞ்சியண்டப்பொருள்களெல்லாந்
தழைக்குநிலைத்திடையுருத்துத்தடமருப்பாற்படியுழுதுதானைநீராத்
துழைத்தனதுபடநெடியதிசைக்கரிகளனைவருமுகுலைமுண்டிக்
கழைச்சுமைகட்குருங்கருத்தாலுயிர்கவராதருள்புரிந்துகடைக்கட்டியில். (௧௩)

வீழ்ந்தபொறிவடைவையெனவிரிகடலிற்றிடங்கெரியவிலங்கலெல்லாந்
தாழ்ந்தசெவிப்பெருங்காற்றில்வேர்பறிந்துவிழுந்திடைத்தளரத்தேவர்
சூழ்ந்திறைஞ்சமகபதியூர்மதக்களிறுசேண்வழுவித்துயின்மயக்கா
லாழ்ந்தபுனற்கயமதனைவிழுந்தமிழ்ந்தினிதிளைவெழுமதனையேய்ப்ப. (௧௪)

கந்தமதக்கார்மழையிற்சுரும்புகருங்கரேணுலத்திற்கருலக்காமர்
தந்தியொன்றுதமிழ்முடிநடத்திலெழுமதன்பிடரிற்றயங்கிரண்டா
மிந்திரன்போலிளிதேறிச்சவநயனுமன்னவனூரிடத்திலேகு
வந்தரசன்கண்டுநினைமகிழ்ந்திடுந்தன்மகடியரமாதிற்றென்றே. (௧௫)

முற்பகலக்குரிசின்மகனுற்கோட்டுவெள்ளிபத்தின்முதுகிலேறிப்
பொற்பினெடும்புகுந்துமவன்றிருக்களத்திலைநலங்கல்போடேனென்னக்
கற்பனைகொண்டனளதனைமண்புரக்குமரசிருடீர்கருத்திறுடி
வற்புறுநெஞ்சகங்கவன்றுனாதனப்பொழுதவன்பால்வந்தான்மாதோ. (௧௬)

நாரதனைமுறைவழுத்திநரபதிதன்மகளுளத்திறுட்டமுற்ற
நீரதனைவிண்ணப்பஞ்செய்துவெள்ளைநெடுங்களிறுமிலவுதேவ
ரூரதனிலுளதாகுமிவள்விரதமென்மனத்தையுலக்குமந்தோ
வேரதனிலுயர்மடவார்வாழ்க்கையுறுநின்றவரிலிருந்தறுண்பம். (௧௭)

என்னையிதற்குபாயமெனநாரதன்வேந்தனைநோக்கியெய்துமாற்று
வன்னையுளத்தினிதகன்றுனுனதுவரவினைநாடியுற்றுன்மன்னன்
பின்னையெனுதிக்கணமேபிள்ளாயக்குறுமுனிவன்பெருநீர்வாவி
தன்னையடைந்தாடுகெனக்கக்கிவான்மலயமுனிதடத்தைச்சார்ந்தான். (௧௮)

னாவருடன்றிடுமுதங்கன்சொற்படியைம்புலனடக்கித்தாநீராடி
மேவருடங்குயர்நகரப்பட்டினியும்பாரணமும்விதியினூற்றி
மாவருடமலயமுனிதடமுறைவான்விழிதுயின்றுன்வாவிப்பாங்கர்
மூவருடமுடிவுறுநாண்மாலைவினைக்கடன்முடித்துமுன்றுன்மார்பன். (௧௯)

கடையாமத்திறுதியெழுகடலொலிபோலெழுமொலியாற்கக்கிவான்கண்
பண்டையொருவியெழுந்திருந்தான்பதமநனின்மதின்மதுளைப்பதிக்குமன்னுந்
தொடைமருவுபுயசயிலச்சுவநயன்றன்மாவேட்டைத்தொழின்மேற்கொண்டு
மிடையுமிருந்தானையுடன்வியன்கந்தமாதனமாம்வெற்பையுற்றுன். (௨௦)

வேட்டைவினைவிளையாட்டின்மேனியிளைத்தகத்தியன்போர்விமலவாவிக்
கோட்டையடைந்தனனிறைவனதுகாலைத்திர்க்கதமன்குமாணிரும்
பூட்டையுநேர்பவமகற்றும்புகழ்மியமதுறைமுடிபுபோற்றியுற்றுன்
றுட்டயங்குமொருபுழைக்கைச்சயிலமெனநாண்கெயிற்றுத்தவளவேழம். (௨௧)

கும்பமுனிதடத்தெழுந்துமருங்குறவுமதுகண்டுருவன்சொன்ன
கம்பமதகரியிதுவென்றெழுந்துபுனல்படிந்தேத்திக்களிற்றைமேற்கொண்
டம்புவியாள்சுவநயனூாடையமினைந்திடும்பொழுதிலந்தவேந்த
னும்பன்மிசைக்கக்கிவானுழையனைந்தான்விருப்பினெடுமுனைக்கலுற்றுன். (௨௨)

இருபிறப்போய்வருதியுனக்கேதுபெயர்யார்குமாணிபத்திலேறி
யொருதனிநீபோவதெவனுளையெனலுந்தன்பிறப்புமுதங்கனென்னுங்
குருமுதல்வன்பணித்தனவுமணவினைமேற்செல்வதுவுந்துறைபடாம
னிருபனுணர்வுறமொழிந்தானவனதுகேட்டுவப்புநதிகிலையின்றுடு. (௨௩)

எந்தவிறைமகடனைநீமணக்கவினைத்தனையவனையீன்றளித்த
வந்தவிறையவன்யானேயந்தணநீயணைந்ததுநன்றுயிற்றையா
முந்துமுயறரும்பிரமசரியநிலைவிடுத்தினிநீமுகிழக்கொங்கை
நந்தமகடனைவேட்டுநல்லறமாமில்லறத்தைநடாத்துகென்றுன். (௨௪)

அறைவதுகேட்டந்தணன்சேயழகியதேயரசவெனையளித்தமேலோன்
மறைவனத்திற்கடவுளடிவணங்கியருந்தவம்புரிவன்மற்றவன்பா
னிறைபெருகுவிப்பிரனைநீவிடுத்தியெனவுகந்துதிருபர்கோமான்
பொறைமருவுபுரோகிதனுஞ்சுதரிசனன்றனைச்சிறப்பிற்போக்கினுனல். (௨௫)

சுதரிசனன்றனையொடுஞ்சுருதிவனத்துடசநிலைதுன்னிமன்னும்
பதரிலரும்பொருடெரிந்ததீர்க்கதமன்பதமலர்கள்பணிந்துபோற்றி
யெதிரிலருந்தவந்தருமமூறின்றியினிதுநடந்தனவோவின்பப்
புதரிலுயர்புலமறையோயெனவினவத்தீர்க்கதமன்புகலுகின்றான். (உசு)

எழுதரியமொழிமுளரியிறையருளாற்குறையெமக்கிங்கில்லையென்றும்
விழுமிதினீயிருந்தனையோசுவநயன்றன்புரோகிதநீவேந்தைநீங்கி
யொழிவதிலையணைந்தபணியுளையென்னச்சுதரிசனனானதுநண்பா
லிழிபிலைநன்றிருந்தனனாற்சுவநயனின்பால்விடுத்தானியம்பக்கேண்மோ. (உஎ)

மகத்திலுயர்நின்மகனாங்கக்கீவானவன்கந்தமாதனத்தி
லகத்தியன்பேர்ப்புனற்றடத்தானவன்குணமுமழகுமொழுங்கறிவுமன்பு
மிகத்தெரிந்துதன்மகளையவற்களிப்பான்விருப்புற்றுவேட்டைபோங்காற்
சகத்திலுயருனதுகுலத்தனயனைக்கண்டிப்பணிதான்சாற்றினனால். (உஅ)

ஐயனுமதிவேண்டுமென்றனன்மற்றாகையினாலரசன்பெற்ற
மையுறுகண்மடக்கொடியைநின்குமரன்மணப்பவருள்வழங்கவேண்டுஞ்
செய்யுமிதுபொருட்டாகவெனைவிடுத்தானினையபெருஞ்சேனையோடும்
வெய்யவினைப்பவந்தீர்க்குந்தீர்க்கதமமுனிவவெனவிளம்பிப்போற்றி. (உகூ)

யானடைந்தபணிக்கூடம்பாடருளுகென்றான்சுதரிசனனிலங்குவேதக்
கானடைந்ததீர்க்கதமன்களிசிறந்துநமக்குமிதுகருத்தேயாமும்
வானடைந்தநெடுங்கந்தமாதனத்துவருதுமெனமறைக்காட்டண்ண
றேனடைந்தபதம்போற்றிப்புரோகிதனோடவண்சென்றான்றினமோராறில். (௩0)

மலையமுனிதடத்துறையுமகற்கண்டானவனுமிகமனமகிழ்ந்து
தலையளிகூர்தாதைபதந்தொழவெடுத்துப்புல்லிமடிதனிலிருத்திக்
கலைமறையும்பிறநூலும்பயின்றனையோவெனப்புகன்றுகற்றவண்ண
நிலைபெருகுமணவினைமேற்கொண்டநெறியீன்றவற்குநிகழ்த்துகின்றான். (௩க)

குருவுதங்கன்மணமுடியுங்கொள்கைநவின்றருந்தமிழின்குரவன்வாவி
மருவுகெனவொருமூன்றுவருடமதிற்படிந்துற்றேன்வந்ததந்தப்
பருவமதிலருள்புரிந்தபடிதனதுவயத்திலிவண்படர்ந்துமாதை
நிருபனுந்தந்திடநேர்ந்துநினையழைத்தானெனப்புகன்றுநின்றான்மைந்தன். (௩உ)

தந்தையெனுந்தீர்க்கதமன்றனயனெனுங்கக்கீவான்றன்னைச்சார
வந்தசெயல்சுதரிசனன்வாய்க்கேட்டுச்சுவநயனுமடியில்விட்டுக்
கந்தமலர்ப்பங்கயனைக்கவுசிகன்சென்றடிவணங்குங்காட்சிபோலச்
சிந்துமுனிதடத்தணுகித்தீர்க்கதமன்சேவடிகள்சிரத்திற்றாழ்ந்தான். (௩௩)

ஏரிலக்கில்படைவேந்தையெழுதியெனவாசிபலவியம்பியன்பாற்
றேரிலக்கின்மறையுணர்ந்ததீர்க்கதமன்குமரனுடனிகழும்போதி
னேரிலக்கில்சேதுவிடைநிலவுதனுக்கோடியெனுநீரிற்றோய்வா
னோரிலக்கமுனிவரொடுமாணவகர்குழாஞ்சுற்றவுதங்கனுற்றான். (௩ச)

உதங்கனிருசரண்டொழுதான்கக்கீவானவனாசியுரைத்தான்பின்னர்ப்
பதங்கனிகர்தீர்க்கதமனுதங்கனெனுந்தவத்திலுயர்படிவர்தம்மி
லிதங்கழறிப்பழமைபலவியம்பினர்களிறைவனும்வந்திறைஞ்சிநின்றான்
கதங்கடியுமுதங்கனடியிருடியுமன்னவற்குநலங்களோர்ந்தானன்பால். (௩ரு)

ஆயிடையிம்மணவினையைமுடித்திடெனத்தீர்க்கதமற்கறைந்தானன்னோ
றூயதவன்மன்னவகேணன்றுநாளையின்றேதொடங்கல்வேண்டுஞ்
சாய்வில்கந்தமாதனமேகடிமறைநூற்சடங்குநருதானமின்னே
சேயிழையைத்தருதியென்னப்புட்டகமண்டபத்திறைவன்சென்றானன்றே. (௪௬)

கடைபுரக்குமொருநூறுதொகைவிருத்தசண்டர்தமைமக்கடிதினேவிப்
படைபுரக்குமதர்விழியைத்தருதியெனக்கடும்பரிமேற்படர்ந்தவல்லே
மடைபுரக்கும்புனன்மதுரைவந்துமணம்புகன்றிறைவன்மனையாரோடு
மிடைபுரக்குமருள்படையாவிளமுலையைக்கொண்டணைந்தாரிறைவன்பாங்கர். ௪௭

மாதானநெடுங்கந்தமாதனத்திற்றீர்க்கதமன்மற்றவைகற்
கோதானமுதற்சடங்குமுடித்ததன்பின்கக்கீவான்முலைவிலங்கன்
மீதானவெண்களிற்றின்பிடரேறியிருநூரவர்வியப்பவங்கி
யாதானம்பயின்மறையோர்வாழ்த்தெடுப்பவிண்ணினிழிந்தவமரர்கோன்போல் (௪௮)

காரணங்குகுழலரசன்கன்னிமனக்கற்பனையின்கடைகாண்டிற்பான்
றோரணங்கணெருங்குபெருங்காமுகமாளிகைபுகுவான்றெருக்கபோது
லாரணங்குமெண்ணமினிமுற்றியதென்றகமகிழ்ந்தாளதன்முன்வாயிற்
போரணங்குப்புயகிருபனைதிரேற்பக்குரவரொடும்புகுந்தாண்மைந்தன். (௪௯)

மருக்கமழுமலர்க்கூந்தல்வனிதையெழிற்சிலதியர்கண்மணிப்பொற்றட்டைத்
தருக்கினெடுங்கரத்தேந்திமணமகளுங்கக்கீவான்றன்னைச்சூழ்ந்தா
ரிருக்குநெறிமுனிவருடனாகின்மனையுட்கொடுபோயிறைவன்றூய
மருக்கியமேமுதலியநல்லுபசாரமவர்விரும்பமடைவிற்செய்தான். (௫0)

சடைமவுலித்தீர்க்கதமனுதங்கனிவர்குமாரனொடுந்தவத்தின்மேலோர்
மிடையவெழிற்சதன்மையெனவிளங்குமணப்பந்தரின்கண்வீற்றிருந்தா
ரடையுமதுபொழுதின்கட்புரோகிதரேருடைவனிதைமடங்கத்தன்றேர்
குடைநிழலிற்புரந்தருளுஞ்சவநயன்றன்கொடிவைக்குமரிதன்னை. (௫௧)

சதவிதழிற்பொலியிருவர்சசியொருத்தியல்லளெனத்தயங்குமாலை
வதனமதியாலுலகம்வயங்கவளர்சருட்கங்குல்வனப்பிருளைப்
பதமலர்மென்சிறுநடையாற்படிமடந்தைதலைமுடிக்குப்பண்பிருளைப்
புதுமணத்தண்காவணத்தட்புங்கவர்முன்சுடர்விளக்கிற்பொலியவைத்தான். ௫௨

வைச்சதன்பின்மணவணிசால்வல்லியவடீர்க்கதமன்மகன்கழுத்திற்
செச்சைமலர்மாலையுறழ்திருக்காத்தாற்செண்பகப்பூந்தேமென்மாலை
யச்சவையினவருவப்பவணிந்திட்டாளுதங்கணவணங்கிவேயாம்பி
யெச்சனுடங்கிடையவள்கைபிடிப்பித்தான்கக்கீவானெழிற்காத்தால். (௫௩)

பின்னவனைவாழ்த்திவினைமுற்றியபின்றீர்க்கதமன்பிறங்குதங்கன்
பொன்னுனைநேர்திதலைமுலைமகள்கேள்வன்மருங்கில்வரும்பூமித்தேவர்
முன்னருடன்மன்னவன்றன்மறையவர்தொக்காயிரத்தான்மூன்றுநூறு
நன்னருணரந்தணருக்குணவளித்தானமுதளித்தநாரணன்போல். (௫௪)

அளித்ததன்பினாசிரியனுதங்கனுந்தனாசிரமத்தடைந்தான்மற்றைத்
தெளித்தமறைமுனிவர்களுந்தங்கடங்கடேயமதிற்சென்றாரங்கட்
களித்தறுகண்வெள்ளிபமுங்கடமுனிவன்றடங்குளித்தக்கரந்தங்கண்
விளித்திறையைத்தீர்க்கதமன்வேதவனமகனுடன்போம்விருப்புரைத்தான். (௫௫)

அரசனுந்தன்மகள்பொருட்டுச்சேதன னூருயிரம்பொனேந்துநூறூர்
புரைபிறங்கியோரயுதம்பூட்டபெட்டியொருநூறுபொருவில்சேதா
நிரையணங்கிலிணங்கியர்கணிலவுமிழுமணித்தரளநீடலங்கல்
வரைசெய்வகையோரொன்றிலாயிரமீந்தனன்முனியுமகிழ்ந்துவாங்கி. (சசு)

வாரியுண்டோன்றடம்படிந்துமனைவியொடுமகன்ருடாமறைக்காடெய்திக்
காரியல்கந்தரற்போற்றிவீற்றிருந்தான்றீர்க்கதமன்கணிப்பில்கால
மாரியனுங்கக்கீவானிறைமகடோள்புணர்ந்துவப்புற்றமர்ந்தான்பன்னுட்
பாரியதோட்சுவநயனுந்தமிழ்முனிநீர்ப்படிந்தனன்றன்பதியிற்போனுன். (சஎ)

வேறு.

ஒருதமிழ்முனிதடமிக்காலேயுவமனின்மணமதுகக்கீவான்
புரிகதைமறைபகர்பொற்பாலேபுகழ்திறமுடையதுதப்பாதே
தருவதுதிருவொடுமெய்ப்பேறேதவறறமுனிவிர்படிப்பீர்நீர்
மரபினில்வினவுதிர்நற்சீரோமருவுவரிசைசெயலுற்ருரோ. (சஅ)

அகத்தியதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் க0எக.

---

# இராமதீர்த்தச்சருக்கம்.

---

வாதராயணன்மாணவகன்பினும்
வேதபாரகர்கேட்கவிளம்புவான்
சீதைகோன்றடஞ்சென்றுகுளிப்பரான்
மூதுணர்க்குறியன்புனன்மூழ்கினோர். (க)

மறையுமோதிடுமந்திரபேதமுங்
குறையுடைப்பொருள்கொண்டுசெய்வேள்வியு
நிறைபலந்தருநீங்கிடுந்தீங்கெலா
மிறையிராமன்றடத்தினிடத்தரோ. (உ)

மட்டுவாரிசத்தோடிவர்வண்டுபோற்
புட்டில்சேர்கைப்புயலனையான்றடத்
திட்டதேதுமிலக்கின்றியோங்குமான்
முட்டிமாத்திரமேனுமுனிவிர்காள். (௩)

தனிமைசான்றசவுனகனுதியீ
ரினிதுகேண்மினிராகவன்குண்டமா
நனிபெருந்தடநாடிநடந்ததோர்
புனிதமாக்கதையுண்டுபுகலுகேன். (ச)

பொதியமாதவன்பொன்னடிச்சென்னியான்
றுதியினீடுசுதீக்கிணனுயிடை
விதியின்மேயவியன்றவமாற்றுவான்
பதியிராமன்பதந்தொழும்பண்பினுன். (ரு)

ஈறில்காட்சியிராமனெழுந்தெனு
மாறுசேர்மறையைந்தெனுமாயிர
மூறுகாதலினுடொறுமோதுவான்
கூறுமன்னவன்குண்டத்தின்மூழ்கியே. (௬)

பலியுணவிற்பசித்தழலாற்றுவான்
வலியவைம்புலவஞ்சரையஞ்சிடா
ஞெலிகொணீநிழிவொழுங்குபிழைத்திடான்
கலிகொளெண்ணிரிகாலமிருந்தனன். (௭)

பொழுதுபற்பலபோனபின்பொன்னெடுங்
கழலிராகவன்காருறழ்மேனியைச்
செழுமலர்த்திருச்சீதையைநீங்கிடா
தெழுதிநெஞ்சினிலேத்தெடுங்கினன். (௮)

வனிதைகோசலைமாணெடுமைந்தனே
சனகனீன்றசரிவளைகாந்தனே
யனுமனன்பவமார்கொண்டாடநீ
டனுமுறித்ததடம்புயவெற்பினாய். (௯)

தாட்கைக்குச்சமன்பதியீந்திடாக்
காடகைக்குங்கவுசிகன்வேள்விமேற்
கோடகைக்கொடுகாத்தருள்கோசல
நாடகைத்தகாதுயிர்நஞ்சமே. (௧௰)

கவந்தவேங்கையுங்கள்ளமாரீசனு
நிவந்தவேணமுநீடுயிர்நீங்கவே
சிவந்தகண்ணசிலைமகளாகவன்
றுவந்தசேவடியொண்டவிவீரனே. (௧௧)

மழுவிராமன்வலங்கவர்மைந்தின
யெழுவிரிச்சிகன்கான்முனைக்கீசனே
தழுவுசீர்த்திதசாதன்செல்வமே
குழுவுருவலிவாலிவெங்கூற்றமே. (௧௨)

தம்பிபாடுந்தொடைப்பரதன்றனை
யெம்பிவாவென்றிலக்குமன்போலரு
ணம்பிகுழுநரலையிலங்கைமன்
றம்பியச்சந்தவிர்த்ததலைவனே. (௧௩)

மோதுவாரிமுரணுடைத்தாயிடைச்
சேதுவாற்றிச்சிரமொருபத்தனைக்
காதியாருயிர்கைக்கொளுங்கைத்தலப்
போதின்மேயபொருவிற்குரவனே. (௧௪)

பல்லுயிர்க்கும்பழவினைவாழ்க்கையி
னல்லறீர்க்குமருளின்சலதியே
யெல்லவர்க்குமிரவியினேர்வரு
மல்லலங்கணவென்றுவழுத்தியே. (௧௫)

ஆளுவாயுன்னடியவன்யானென
நாளுநாளுநலங்கொளிராகவன்
றுளிலண்டுதைமூடப்பச்சுநீக்கினன்
வேளைவென்றவியன்றவமாற்றினன். (கசு)

ஆமனங்கொள்சுநீக்கினைமாதவற்
காமநாளிலயோத்தியர்காவலன்
றேமலர்க்கட்டிருவருட்பார்வையா
லோமுதற்பிரமத்துணர்வுற்றதால். (கஎ)

பண்டைவேதம்படியாதுணர்ந்தனன்
கொண்டநாளுராவினையின்றியே
யெண்டருங்கலையாவையுமாய்ந்தனன்
விண்டொடாவுடல்வின்செலக்கற்றனன். (கஅ)

வீற்றுடற்புக்குமீள்வதுமேவினு
னேற்றதேவர்க்கெதிர்மொழிபேசிடு
மூற்றமும்முறுதவிமுன்னுமுயிர்க்
கூற்றுளங்கொளுங்கொள்கைபடைத்தனன். (கக)

முத்தொழிற்புரிமூவிருப்புட
னொத்திறப்புவனத்திறுமேவிடுஞ்
சித்திபெற்றனன்வாயிலிற்றோர்கொளு
வித்தகப்பொருட்காட்சியுமேவினன். (உ0)

நாமவார்குழற்சானகிநாயக
னுமவாவியின்மூழ்கியகன்மையாற்
றேமவாவில்சுநீக்கினனெய்தினன்
சேமவாழ்வெனும்போகந்திருவெலாம். (உக)

இத்தகைப்புகழ்மேன்மையிசைத்தாய்
மைத்தபாவமும்வஞ்சமாணமு
மாய்த்திடாதருமத்துயர்த்தாய்க்
கைத்தகீழ்நிலங்காட்டாக்கவினதாய். (உஉ)

வீடுமாக்கமும்வெஃகியளித்திடும்
பீடுகல்லும்பெருமைபடைத்தாய்க்
கோடுவார்சிலைக்கொண்டலன்றன்கழ
லூடுகாதலருத்திருவுள்ளதாய். (உங)

ஞாலமேத்துகதுந்தடமற்றதன்
கூலமேல்வளர்கோசலர்கோமக
னீலகந்தரமித்தனருட்குறி
மூலலிங்கமிருத்திமுறைமையால். (உச)

சராசராங்கடளிர்ப்பத்தனன்பிறைப்
புராரிபொற்பதம்பூசனைசெய்தன
னிராமநாதனையேத்துவரொய்துவார்
பராபரந்திருமேவப்படாதரோ. (உரு)

கண்ணன்காருத்தன்காதலினர்ச்சனை
பண்ணும்பார்ப்பதிபங்கன்பதமலர்
நண்ணிமுன்னநவிற்றியபொய்ப்பவம்
புண்ணியந்தருபுத்திரன்போக்கினன். (உசு)

அன்னவாசகங்கேட்டருள்சூதனை
முன்னிருந்தமுனிவர்வினவுவா
ருன்னும்வாய்மையுதிட்டிரன்பொய்மொழி
யென்னகாரணத்தாலன்றியம்பினன். (உஎ)

அடலிராமதடத்தினிலாடியே
சடிலசேகரன்றன்னருட்கண்ணினுற்
படிறுசொல்பவம்பாற்றியபண்பெலா
மடமறப்புகலென்றுவமுத்தினர். (உஅ)

வலத்திருக்கைமழுப்படைவள்ளலார்
நலத்தசேவடிநண்ணியுதிட்டிரன்
சலத்தினேதுசடப்பவந்தீர்ந்தமை
சொலத்தொடங்கினன்சூதனவர்க்கரோ. (உகூ)

பண்டுபாண்டவரைவரும்பார்த்திடுங்
கண்டெரிந்திடான்கான்முளையோர்களு
மெண்டகும்பெருவாழ்வின்பொருட்டிகல்
கொண்டுடன்றுகுருநிலமேயினர். (ஙo)

ஆங்கணையிருநாளமராற்றியே
காங்கெயன்மெய்கலங்கிவிழுந்தபி
னாங்குசான்றவுரத்தனுணர்ச்சியான்
ருங்குவில்லன்றனுமறைத்தேசிகன். (ஙக)

வட்டமாகவில்வாங்கியொராந்துநாட்
டிட்டத்துய்மனையேற்றுச்செழுஞ்சர
மட்டிலாதவழங்கினன்மாரிபோற்
பட்டொழிந்தனபாண்டவர்தானைகள். (ஙஉ)

பாண்டவப்படைசாய்தலும்பாஞ்சால
ராண்டகைத்திறல்வீரனடர்ந்துபோர்
மூண்டுவாளிமுடுக்கிமுடங்குவின்
மாண்டதேசன்பதாதியைவாட்டினன். (ஙஙு)

மீட்டுவிற்குருவேதியன்றன்படை
வாட்டுதிட்டத்துய்மன்மிசைவார்சிலைப்
பூட்டுமேப்பலபோக்கினன்போக்கலுங்
கூட்டுபாண்டவர்வானிகுலைந்தவே. (ஙச)

அனிகமோடலுமங்கணருச்சுனன்
குனிசிலைக்குருமேற்சிலைகோட்டினு
னனிகொள்போரிதுகாணுநசையினு
வினிதுவானவர்வானில்வந்தீண்டினர். (ஙரு)

பொருவுபோரிவைபோற்பிறவின்மையா
லிருவர்போர்க்குமிதரவிதரமே
மருவுநேருவமானமீவருத்திடப்
பெருகுகாதல்பெறிற்கவிவாணரே. (௧௬)

பல்லமாரிபரிதிமறைத்திட
மல்லலாடமர்மற்றிவர்செய்வழிச்
செல்வினூர்தியன்சேய்நிலையாண்மையை
வில்விறலன்வியந்துபழிச்சினான். (௧௭)

வைக்குமன்புடைமாணவகன்றனே
யக்கணத்தினகன்றமராற்றினான்
பக்கமேவியபாஞ்சாலநாயகன்
கைக்கணைத்தியங்கார்முகப்போதகன். (௧௮)

வருத்தவுண்டையின்மாண்டனுத்தேறிகன்
மிருத்தநூற்றின்மிசையிருபானென்னுஞ்
சகத்திரங்கழன்மன்னவர்தங்கள்போ
ருகத்தூரந்தவருளுயிர்நீக்கினான். (௧௯)

செவ்வியன்னதிற்றிட்டத்துய்மன்சினங்
கவ்வுநெஞ்சினன்கார்முகத்தேசன்மேற்
பவ்வமுண்டுபடர்முகிற்றுமாபோல்
வெவ்விறற்கணைபற்பலவீசினான். (௨௦)

பூபதிக்குலமிற்றவைப்போர்கடித்
திபமன்னதொர்திட்டத்துய்மன்மிசைக்
கோபமுன்னெதிர்கூடிப்புடைத்தனன்
சாபநாதன்றனதுகைவாளினால். (௨௧)

கட்கம்வீசிக்கடிதினறைந்தபின்
வாட்கவின்பெறுபாஞ்சாலமன்னவ
னுட்கவாளியுடைப்பிலதூவினான்
கொட்கநெஞ்சங்குலைந்தவன்மாழ்கினான். (௨௨)

வாயுமைந்தன்மருவுபாஞ்சாலர்கோ
னேயுமாறுகண்டோடினனெல்லைதன்
சேயதேரினிலேற்றினன்சென்றுமுன்
றூயகாட்சித்துரோணனைச்சொல்லுவான். (௨௩)

அரியநான்மறையந்தணர்தங்களிற்
பெரியராவர்பிறர்க்கிடொண்ணிலார்
தரியலார்தமதொன்றிருசார்பினுக்
குரியரோபொருணன்மையுணர்ந்துளோர். (௨௪)

மெய்த்திருத்தவம்வீரம்படைக்கினு
மெத்திறத்திடரெய்தியதாயினு
முத்தமக்குலமேன்மையொழுக்கமார்
தத்தநீதியிழைப்பர்கொல்சால்புளோர். (௨௫)

சாதிவாய்மைதவறித்தருக்கினுற்
றீதுசேரினுஞ்செய்யார்கொலைத்தொழி
லாதலன்றியவனியரசரை
வாதைசெய்வர்கொன்மாமறைவாணர்தாம். (சசு)

கொன்றிடாமைகுலமறையோர்செயல்
வென்றியென்றுவிதிப்பழுதாற்றியே
புன்றலைக்குடிவேடர்புரப்பரா
னன்றுநன்றுசுருதிநடக்கையே. (சஎ)

கேணிகழ்த்தவன்கேட்டுசாயகத்
தூணிவெஞ்சுறத்தூக்கித்துரோணனீ
மாணிலத்துயிர்காக்குமனுமுறைக்
காணிவேந்தரைக்கொல்லக்கருதினுய். (சஅ)

வெட்டும்வாட்கைத்துரோணவென்மேலது
புட்டின்மேவுபொருகணைத்தூணியோ
மட்டுறுதமறைப்பொருட்புத்தகங்
கட்டியார்த்தகவளிகையேகொலோ. (சகூ)

பைத்தகொம்பர்ப்பலாசநற்றண்டமோ
கைத்தலத்ததுகார்முகமாவதோ
மெய்த்தனுக்கண்விசித்ததுநாரியோ
புத்தகத்திற்புனையுங்கயிறதோ. (ருo)

வலதுகையதுவாயழல்வாளியோ
விலகுநூல்களெழுதெழுத்தாணியோ
பனைவழங்குபசுக்கள்படுக்கவோ
கொலைவினைக்கவோகொண்டதுவாட்படை. (ருக)

வயமளித்திடும்வாம்பரிவையமோ
வயர்வில்வேள்வியதன்முடிவேறிடும்
பெயர்வில்காட்சிப்பிரமரதங்கொலோ
வுயர்துரோணநீயூர்ந்திடுமூர்தியே. (ருஉ)

மார்பினூலுமறையவர்வேடமுஞ்
சேர்புநின்றனைதிண்பெருங்கைகளிற்
கூர்படைக்கலங்கொண்டாய்குரவநீ
பார்புரக்குமிறையோபனவனோ. (ருங)

அந்தன்செய்களுக்காயமராடுமின்
மைந்தன்முனுமடிந்தனன்ருட்பினு
ணைந்திரங்கலைநோலெனக்கொண்டனை
வெந்துரோணநின்மேன்மைநன்றென்றனன். (ருச)

தண்மைதீர்பரித்தாமன்மடிந்தவா
றுண்மைநாடியுதிட்டிரன்வாயிருற்
றிண்மைசால்படைபோக்கித்திகிரிமேல்
வெண்மைநூலணிமார்பன்விழுந்தனன். (ருரு)

சோகமுற்றுத்துரோணன்றனுவினை
யோகினுக்கினெறிவிடவுன்னினான்
பாகமங்கதிற்பாஞ்சாலனன்னவன்
சேகரங்கொளவாள்கொடுசென்றனன். (ருசு)

ஒல்வதன்றெனவிட்டிடாவிதியோர்
சொல்விலக்கித்துணிந்தவன்கூடுமுன்
கல்வியோருடைக்கார்முகத்தேதிகன்
செல்வச்சேனினைச்சென்னியிற்கூடினான். (ருஎ)

தருமநீடுதவநெறிகேள்விசால்
துருபனேறுவிரீடியதுருல
விருபனேறுடையனென்றனர்நோக்கினார்
பொருவிலாரியன்பொன்னிலம்போனதை. (ருஅ)

வஞ்சவாள்கொடுவிட்டத்துய்மன்னவன்
நெஞ்சவுற்றதுரோணன்றலையினை
யெஞ்சவீர்த்தனனிற்றனதானைகள்
பஞ்சவர்க்குமகிழ்ச்சிபடர்ந்ததால். (ருகூ)

ஆசித்தானைத்துணுக்கெனச்சாய்தலுங்
கூசிப்போரினங்கூட்டாய்துலைந்தெனன்
பேசிக்காவெனைப்பேதுற்றுக்கேட்டனன்
வாசித்தாமன்வலம்புரித்தாமனே. (சுo)

ஆகதாமனுந்தோன்றன்முகத்தெதிர்
குரவனிற்றமைகூறுந்துவனியிலான்
வரவுதேர்ந்தகிருபனைவந்தவா
றாகதேகதனைதேறுதெனவோதினான். (சுக)

இளக்கோடிக்கிருபனுங்கேடிலா
வளக்கரும்பரித்தாமற்றுனத்தனுக்
அளக்கிலாதுதுரோணனென்பானவன்
விளக்கநீடும்விரிஞ்சன்பகழியால். (சுஉ)

மூண்டபோரின்முரசக்கொடியினான்
மாண்டதானைமடியவருத்தினு
னீண்டடங்கிலன்யார்க்குமிவனெனுப்
பாண்டவர்க்குமுருக்குதன்பகருவான். (சுங)

வேறு.

மெத்துதானைபடமுருக்கிவில்வலங்கொள்கல்விசா
லித்துரோணன்பாவராவுபீடழிந்துமீன்கிலான்
பொய்த்ததொன்றுதருமனின்றுபுகலலன்றுபாயம்வே
றெத்ததில்லையுவனிருக்கிலொன்றுமாவதின்றரோ. (சுச)

அருமைமைமைந்தனசுவத்தாமனுவிபோனதென்னவே
தருமமைந்தனேறுகில்லீறுதங்குதன்கையாயுத
மொருவிவீழ்வனுண்மைவென்றியொன்றிடாதொழிந்ததேன்
மருவலாளர்நீஇவிட்டும்வன்மைகொள்வரொன்றனன். (சுரு)

இரணியசிருங்கமாதியிசைமனுவிசைத்துவெள்ளைப்
புரிவளையேந்தினானைப்புதுகிலாமவுலியானைப்
பரவியாங்கிதயக்கோயிற்பாவித்துப்பகர்வேறாதி
யரியமந்திரத்தினாலேயாழ்புனன்முன்னராடி. (௧௮)

இம்முறைபின்னுமூழ்கியெழுந்துசூரியனைநோக்கிச்
செம்மனின்சாங்கடண்டச்சிறந்தொளிர்தீர்த்தமெல்லாம்
பொய்ம்மைதீரருளாலிங்குப்புனிதநீதருதியென்று
மெய்ம்மைசாலன்பிற்போற்றிமீளவுமுன்போன்மூழ்கி. (௧௯)

குடதிசைநெறியானண்ணிற்குளைகடலாடியங்கட்
படர்தருதருப்பைப்பாயற்பண்ணவற்பரவல்வேண்டும்
வடதிசைமருவுந்தேவிமாபுரமார்க்கநண்ணி
னிடர்கெடநவகற்றீர்த்தத்திப்பரிசிழைத்தல்வேண்டும். (௨௦)

இசைதருமிராமன்சீதையிலக்குமன்பிப்பலாதி
வசையில்கண்ணுவன்மயிந்தன்மாகிருதாந்தனெட்டுத்
திசைபுகழ்சரபன்வேகதெரிசியேகாலின்செம்ம
லசைவின்மன்னியுவேகாளராத்திரியகர்க்கனேசன். (௨௧)

முதுகவியிடபனோடுமொழியும்வித்தியையேவானக்
கதிர்மகன்றுவிதனின்னோர்க்கருதியர்க்கியமுன்றந்து
துதிதருமுனிவர்தேவர்தோமறுபிதிர்களின்னோர்க்
கிதமுறுதர்ப்பணங்களீந்துபின்கரையிலேறி. (௨௨)

நனைதுகில்களைந்துலர்ந்தநற்றுகில்புனைந்தேயாச
மனமதுபுரிந்துதெய்வமாமறைவழியேசாலப்
புனிதமாஞ்சிராத்தமாதிபுரிந்துதொல்லறிவுசான்ற
பனவருக்கிரணியங்கோப்படிமுதற்றானம்பண்ணி. (௨௩)

பூதலம்புகழுந்தெய்வப்புகழ்தனுக்கோடிதன்னிற்
சேதுமூலத்திற்செய்தசெயன்முறைசெய்துமூழ்கக்
காதலினடந்துபின்னர்க்காமர்சக்கரதீர்த்தத்தி
லேதமில்விதியினோடுமினிதுவந்தாடியேறி. (௨௪)

சேதுநாயகனும்மன்னுந்திகழ்தருதருப்பைப்பள்ளி
மாதவற்போற்றிமற்றவயங்குசக்கரதீர்த்தத்துந்
காதலிற்குடைந்துபின்னர்க்கவித்தடம்படிந்துசீதை
யேதமில்வாவிமூழ்கியிருணமோசனத்திலாடி. (௨௫)

படிபுகழிலக்குமன்பேர்ப்பைந்தடமருங்கிலெய்தி
முடிமயிர்களைந்தபின்னர்மொழிந்தவத்தடத்தின்மூழ்கி
யொடிவில்சீரிராமதீர்த்தத்துறைதருவிதியினோடிப்
புடவிபொன்முதலதானம்பூசுரர்தமக்களித்து. (௨௬)

பங்கயவாசம்வீசும்பாவநாசத்தின்மூழ்கிச்
சங்கையினுழந்துதெய்வக்காமருசுனைபீர்தோய்ந்து
பொங்குசீர்யமுனையாடிப்புரைதவிர்ந்தனைனர்
துங்கருக்கியைந்தவாறுதானங்களீந்துமன்னோ. (௨௭)

வேறு.

சாவித்திரியேசரசுவதிதயங்குகாயத்திரித்தடங்கண்
மேவிக்குடைந்தாங்கனுமகுண்டவியனீராடிவிரைநாறும்
பூவிற்பொலிந்தபிரமகுண்டம்புகுந்துபடிந்துபுகழ்ந்துகவை
நாவிற்றிகழுநஞ்சுமிழ்வாய்நாகதீர்த்தக்கரைநண்ணி. (௨௮)

மன்னுமனந்தாதியரட்டமாநாகத்தால்வகுத்தவிந்நீர்
தன்னிற்கங்கைமுதனீர்கடங்கள்பவநீங்கிடத்தங்கும்
பன்னுபவந்தீர்த்துயர்முத்திபுரிவாலளிக்குமதிற்படிந்து
பின்னர்ப்பொதியத்தமிழ்முனிவன்பிறங்குபெருநீர்த்தடமூழ்கி. (௨௯)

முடிவிலாதபாதகங்கண்முழுதுங்கணத்தின்முடித்தருடீக்
கடவுணீரில்விதிமுறையேகாதலோடும்படிந்தாடி
யொடிவிலாதசிராத்தமுதலுதவிமறையின்முடிபுணர்ந்த
புடவியிமையோர்க்கிரணியங்கோப்பூமிமுதலபலகொடுத்து. (௩௦)

முன்னருரைத்தநேமிதடமுதலதீர்த்தமிவையனைத்து
மின்னமுறையேயாதறமக்கியைந்தபடியேதானுதல்
பன்னுமரபிற்படிந்துவஞ்சம்படையாதியன்றபடிபடிகோர்ச்
சொன்னமுதலதானங்கயேமறையோர்க்குதவியபின். (௩௧)

உறைநீராழிசூழிலங்கையுரவோற்கொன்றபழியொழிய
வறைநீரகழிக்கொடிப்புரிசையயோத்திவேந்தனருச்சித்த
பிறவாயாக்கைப்பெரியோனைப்பிறக்குந்தேவர்பெருமானை
யெறிநீர்விரிந்தசடைமவுலியிராமநாதன்றனையிறைஞ்சி. (௩௨)

வையம்பரவும்புகழ்ச்சேதுமாதவனையுமகிழ்ந்திறைஞ்சித்
துய்யவிராமனிலக்குமனைத்தொழுதுசீதைதனைப்போற்றிச்
செய்யபுனல்களுள்பிறவுஞ்சிறப்பினுடித்திரும்பவுஞ்சென்
றையனிராமநாதனடியன்பால்வணங்கியதன்பின்னர். (௩௩)

தேசுபயிலுந்தனுக்கோடிதீர்த்தமதனைச்சென்றடைந்து
நேசம்புரிந்துமுறைபிறழாகியமந்துடனேபடிந்தாடி
யேசில்சிராத்தமுதலவிழைத்தியன்றபடிவஞ்சகமின்றி
மாசிலாததானங்கண்மறைவேதியர்கடமக்கீந்து. (௩௪)

கோடிதீர்த்தந்தனிலாடிக்கோடுருதங்கியன்றபடி
பீடுசான்றபாற்சுரபிபிறங்குங்கனகந்திலந்தூய
வாடைபூமிமுதலாகவறைந்தபலவாந்தானங்கள்
பாடல்சான்றசுருதிமறைப்பனவர்தமக்குப்பரிந்தளித்து. (௩௫)

வேறு.

அன்னதன்பின்னர்முன்னரயோத்தியர்பெருமான்பூசித்
துன்னருமன்பாற்போற்றுமுமாபதிபிராமநாதன்
சன்னிதிதன்னிலெய்தித்தாழ்ந்தினிதெழுந்துமுக்கான்
மன்னுறுசெம்பொற்கோயில்வலங்கொடுவந்துநின்றே. (௩௬)

முத்தனேபோற்றிமூவர்முதல்வனேபோற்றிபோற்றி
நித்தனேபோற்றிபோற்றிநிமலனேபோற்றிபோற்றி
யத்தனேபோற்றியன்பர்க்கன்பனேபோற்றிபோற்றி
சுத்தனேபோற்றிவானோர்துணைவனேபோற்றிபோற்றி. (௩௭)

ஆதியேபோற்றியாராவமுதமேபோற்றிமங்கை
பாதியேபோற்றியின்பப்பரவையேபோற்றிமேலாஞ்
சோதியேபோற்றிதெய்வச்சுருதியுந்தொடரொணுத
நீதியேபோற்றிகற்றோர்நிதியமேபோற்றிபோற்றி. (௩௮)

கவளமாகரியுரித்தகடவுளேபோற்றிமுக்கட்
பவளமாமலையேபோற்றிபங்கயன்முகுந்தன்றேடுந்
தவளமாநீறுபூத்ததழற்பெரும்பிழம்பேபோற்றி
துவளமேருவைவளைத்ததோளனேபோற்றிபோற்றி. (௩௯)

ஏனத்தினெயிறுமோட்டியாமையினெலும்புந்தூணின்
முனத்தினுதித்தசிங்கத்தலையுடன்றரித்தாய்போற்றி
மோனத்தினீங்காருள்ளமுண்டகமலர்நிறைந்த
ஞானத்தண்டேனேபோற்றிநான்மறைப்பொருளேபோற்றி. (௪௦)

எண்ணலார்புரங்கண்மூன்றுமேமூநாக்கடவுளுண்ண
மண்ணெலாமுண்டுமிழ்ந்துமறிதிரைப்பாலின்வேலைக்
கண்ணிலேகண்படுக்குங்கருநெடுங்கணைவிடுத்த
வண்ணலேபோற்றிபோற்றியநாதியேபோற்றிபோற்றி. (௪௧)

பாழிவாய்மணிகொள்பாந்தட்பாயனீத்தயோத்திவந்த
வாழிமாவிராமன்றன்பாலாழிநீரகழிலங்கை
வாழிராவணவரக்கன்வலிகெழுபிரமகத்திக்
காழிராதகற்றியாண்டகருணைமாகடலேபோற்றி. (௪௨)

அண்டனேபோற்றியண்டரமுதமுண்டிடவிருண்ட
கண்டனேபோற்றிசெந்தீக்கையனேபோற்றிதிங்கட்
டுண்டனேபோற்றிகொன்றைத்தொடையனேபோற்றிகோபச்
சண்டனேர்விழவுதைத்தசரணனேபோற்றிபோற்றி. (௪௩)

சூலனேபோற்றிபோற்றிசுராதிபர்மகுடந்தோயுங்
காலனேபோற்றிநேமிக்காளமாமேகமேவும்
பாலனேபோற்றிபோற்றிபண்டைநான்மறைநூலோது
மாலனேபோற்றிபோற்றியம்பலத்தமுதேபோற்றி. (௪௪)

நேசனேபோற்றிபோற்றிநிமலனேபோற்றிசேது
வாசனேபோற்றிபோற்றிவள்ளலேபோற்றிபோற்றி
தேசனேபோற்றிபோற்றிசீதைகோன்பூசித்தேத்து
மீசனேபோற்றிபோற்றியிராமநாயகனேபோற்றி. (௪௫)

கன்றுமழுபரசுதாங்குங்கரசரோருகனேபோற்றி
மின்றிகழ்சடையிற்கங்கைமிலைந்தநாயகனேபோற்றி
தென்றிசைக்கணியாந்தேவைத்தேவாதிதேவேபோற்றி
யென்றுபல்புகழ்நாமங்களின்தெடுத்திசைத்துவாழ்த்தி. (௪௬)

வேறு.

எந்தைபிரானையெமையாளுமிராமநாதன்றனைப்புகழ்ந்தாங்
கந்தண்மலர்ச்சேவடிவணங்கியனேயோன்பூசைதனக்கான்
செந்தண்மலர்சந்தனமுதலசிறப்பினளித்துத்திகழுமா
விந்தன்முதலோர்தொழும்புனிதவிடையோனவன்பால்விடைகொண்டு. (௪௭)

பொன்னந்திகிரிப்படையேந்தும்புனிதர்சேதுமாதவனை
முன்னாரிறைஞ்சிப்புகழ்நாமமொழிந்துபோற்றிமற்றவன்றன்
மன்னும்பூசைக்குபகரணம்வழங்கியவன்பால்விடைகொடுமுன்
சொன்னநியமத்துடன்றனதுதொல்லைப்பதியின்பாலடைந்து. (௪௮)

அந்தணாளர்க்கறுசுவையோடன்பாலடிசிலளித்துவகை
வந்தநாளமளித்திடுதன்மரபாம்புனிதமாதவத்தி
யிந்தவாறுபுரிந்தோர்களிராமநாதன்றிருவருளான்
முந்துருழ்ந்தபவமனைத்துமுடிப்பார்பிராயமுழ்காரால். (௪௯)

கொடியமிடியாமெரியழல்வாய்க்கோடைவெயிலாலுடல்வெதும்பார்
கடியதுயர்நோய்பிணிமேவார்கல்விகனகஞ்சேப்முதலா
வுடையமல்லற்பெருந்திருவோடுவந்துவாழ்வுற்றினிதுறைந்து
முடிவிலாதசிவமுத்திமுடிவிலடைவர்முனிவீர்காள். (௫௦)

இனையசேதுமாதீர்த்தமேவிமுழ்குமியல்பில்லார்
வினைகளனைத்துமகற்றுமிந்தமிக்கசேதுமாக்கதையை
நினைவுபுரிந்துகேட்டுவந்துநிகழ்த்திலனையநிறைதீர்த்த
நனையும்புனிதப்பயனவர்பானண்ணும்பாவநண்ணுதால். (௫௧)

வேறு.

கோதுசேர்புலவேட்டுவர்சாயவேகூருவருள்வாட்கொடுசாடியே
தீதுதீர்தருமாதவமாணதோர்சேயகோன்முறையோச்சுபுதேசசால்
வேதநூனெறிமார்க்கம்வழாமலேவேள்விநாடுபோற்றுபுநாளுமே
யேதிலாவரசாட்சிசெய்மாதவிர்துசேதுவியாத்திரைநீடுபே. (௫௨)

சேதுயாத்திரைச்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம், ௩௨௫௭.

---

# சேதுபலச்சருக்கம்.

விண்டலம்புகழ்சூதமாமுனிவரன்மீண்டு
மெண்டருங்கணமுனிவரைநோக்கியீர்யாருங்
கொண்டவன்பொடுகேண்மினீரெனக்குரைகடல்சூழ்
மண்டலம்புகழ்சேதுவின்வருபலன்வகுப்பான். (௧)

பூதலந்தனிற்புண்ணியதலங்களிற்சேது
மாதலந்தனைநிகர்தலமில்லைமாதவத்தீ
ரோதுமன்னதிலதுசெயந்தவந்தானமோமம்
வீதலுற்றிடாதொன்றதேயநந்தமாய்விளங்கும். (௨)

இனையசேதுவிலிருந்தனுக்கோடியிலொருநா
ளனையிலாவிரமுகமுடைக்கங்கையன்னதிரு
முனையகாசியிலொருபஃதாண்டினிதமர்ந்த
புனிதமாம்பெருந்தன்மைசேர்பலனதுபொருந்தும். (௩)

போதுமூன்றினின்மூழ்கியேபுரிசடையிராம
நாதனாரடிபோற்றியச்சேதுவினண்ணிற்
றீதிழைக்குமாபாதகந்தீர்ந்திடுந்தில்லை
யீதிலேதிருவருடமேவியபலன்மேலும். (௪)

முந்துமாறெழுத்தாயிரந்தொட்டுருமுடியா
விந்தமாபுகழ்ச்சேதுவிலாசைபோடிசைப்பார்
புந்தியாலிப்பூசனைபுரிந்துமெய்ப்பொருளாஞ்
செந்துவிர்ச்சடையிராமநாயகனடிசேர்வார். (௫)

மாகமாநதிப்புனிதநீராடின்மாமதுரை
தோகைமஞ்ஞையாயிந்துறைதொல்லைவெண்காடு
மேகமுடியபழமலைவேங்கடவெற்பு
நாகர்போற்றுசேடாத்திரிமிசைமருவினை. (௬)

தேசுசாலருச்சனைவனமறைவனந்தில்லை
யீசர்காழிதென்கயிலைபிரயாகமேயபக்கா
வானிலாநமர்வயித்தியபுரமருட்குடந்தை
காசிசீர்ப்பருப்பதங்கமலாலயங்காஞ்சி. (௭)

இப்பெரும்பதிமுதலியவீசன்மால்பொருந்து
மொப்பரும்பதியானினுமோரியாண்டுறைந்து
வப்பெரும்பலனடையுமென்றுலகன்றுறைநீர்
மெய்ப்பெருந்தனுக்கோடியின்பெருமையார்விரிப்பார். (௮)

இனையசேதுவின்பெருமையையிருடிகாணின்ற
வனையநேருநால்வேதமுமன்றிட்டமுறையும்
வினையமார்புராணம்பதினெட்டுமிருதி
யெனையவும்மொருவாக்கியமாகவேவியம்பும். (௯)

இந்தவண்சிலைக்கோடியின்றுவைக்கதிரோ
னந்துவெம்பணிவெள்ளுவாண்மூழ்கிடின்மலிநீர்
தந்தகங்கைசேரவிமுந்தமாம்பெயர்த்தலத்தி
லந்திரட்டியாண்டாடியபெரும்பலனடையும். (௧௦)

கோடியுற்பவத்துற்றபாதகமெலாங்குலைவுற்
றோடுமக்கணம்பரிமேதமாயிரமுஞற்றும்
பாடின்மெய்ப்பெரும்பலனதுபொருந்துமப்பார்த்திற்
கோடிலாதுணர்ந்தொன்றியேகெழுவுமாதவத்தீர். (௧௧)

இங்கனுற்பவத்தயனுந்திலம்புவித்தினத்திற்
றங்குபூரணைதனிலமாவாசியிற்றானி
யெங்கணும்புகழ்சேதுவைக்காணிலேழ்பிறப்பிற்
றுங்கவெம்பவங்கண்டிடாதெய்திடுஞ்சுவர்க்கம். (௧௨)

உதயவேளையின்மாகத்திலுதங்களெல்லாங்
குதிகொளுந்தனுக்கோடியின்முந்நீர்க்குடைந்தா
ரதிகமாயினபவமொரீஇக்கங்கையாடி
நதிகடோய்பயன்பெறுகுவர்நாடருந்தவத்தீர். (௧௩)

வாய்ந்தசேதுவிலுதயத்திலேந்துநாண்மாகந்
தோய்ந்திடிற்பரிமேதயாகாதிகளென்னுஞ்
சாந்திராயணம்பிருச்சிரகோன்புகடரும்பே
றுய்ந்துநான்மறையோதியபேறெலாமடைவார். (௧௪)

அந்தவேளையிலந்நற்றிங்களிலறைந்த
வந்தநீரிலீரைந்துநாளாடினோரலர்ந்த
வந்தநாற்றிதழம்புயவம்பொனுலயஞ்சே
ர்ந்தமில்புகழ்ச்சதுர்முகன்மனோவதியடைவார். (௧௫)

இனையகாலையிலினையநேர்திங்களிலினைய
புனிதநீரின்மூவைந்துநாளாடினோர்புரைதீர்
கனகமால்வரைமிறுத்துபுகனைகடல்கடைந்த
வினையுறாய்முடிக்கடவுள்வைகுண்டத்துவாழ்வார். (௧௬)

இரைத்திடுந்தனுக்கோடியிலிருபதுதினமுன்
னுரைத்ததிங்களிலுதயத்திலாடினோரொலிநீர்
அரைத்ததும்பியபுனன்முடிமுத்தலையுதிவேல்
வரைத்தடஞ்சிலைவானவனிடத்தினில்வதிவார். (௧௭)

கூறுதிங்களிலுதயத்திலையைந்துகொண்ட
னீறுநாடனுக்கோடியில்விருப்புடன்படிந்தான்
மாறிலன்புடையிராகவன்பூசனைமகிழ்ந்து
பேறுகந்தருளிராமநாயகனுருப்பெறுவார். (௧௮)

உந்துமிப்புனலுரைத்தவத்திங்களிலுதயத்
தைந்திரட்டிமூன்றுந்தினமாடினோரோத்தி
வந்துதித்தருளிராகவன்பூசைசெய்மணிசேர்
கந்நாத்திராமேசனொடிரண்டறக்கலப்பார். (௧௯)

ஆகையாலிந்தச்சேதுவிலறிஞரொப்படியு
மோகையாலுயர்மாகமாதத்துதயத்திற்
பாகையார்மொழிப்பதுமைகோன்பரிவினுற்குயிற்றும்
வாகையார்தனுக்கோடியிற்படிந்திடன்மரபே. (௨0)

ஆதியாமருத்தோதயமகோதயமலரி
யோதுபானுவெண்மதியுபராகத்தி* லுரைசால்
சேதுமூழ்கினர்கருவுறார்பிரயமுஞ்சேரார்
வேதியக்கொலையாதியபவங்கள்வீட்டுவரே. (௨௧)

அங்கதன்றியுஞ்சகலசெல்வங்களுமடைந்தே
யிங்கிதந்தருமின்பெலாமிசைந்துவீற்றிருந்தே
பொங்குமிந்திரனுலகமாதியவெலாம்பொருந்தித்
திங்கள்வார்சடைமுடியவன்பதத்திணைச்சேர்வார். (௨௨)

ஆதலாற்கதிர்மதிகளையரவங்கடீண்டிற்
போதமாருத்தோதயமகோதயம்பொருந்தி
லோதுபுண்ணியகாலங்களாமிகவுமந்த
சேதுமூழ்கிடவேண்டுமெந்தினமாச்சிறந்தே. (௨௩)

---

* உபராகம்-கிரகணம்.

இலங்கைவேந்தனைவதைப்பதற்கிராகவன்முன்னாள்
வலங்கொடேகிருமித்தவிச்சேதுவைவணங்கி
நலங்கொளுந்தெய்வமுனிவரர்பிரமநன்முனிவோ
ரலங்கல்வேந்துமாமுனிவரர்தென்புலத்தமர்ந்தோர். (உ௪

சித்தர்சாரணர்சிறந்தகந்தருவர்செங்கமல
வத்தனுதியவிமையவர்கின்னரருரகர்
பத்தியோடென்றுமிருப்பர்களாகையாற்பகர்ந்த
நித்தமேவுமிப்புண்ணியசேதுவைநினைந்தே. (உ௫

யாதொர்தேசத்துநீரிடைமூழ்கினுமியற்றும்
பாதகம்வராசேதுநாப்பண்ணுறைதீர்த்தத்
தோதகன்கரையொருபிடியோதனமுதவிற்
பேதுறும்பிணிபுருணக* முதலியபிரியும். (உ௬

அராவணைப்புறத்தறிதுயிலொழிந்துவந்தயோத்தி
யிராமன்வண்கரத்தேந்தியதனுவினுற்கீறுந்
தராதலம்புகழ்கீற்றினைக்கண்டவர்தாம்போய்ப்
பராவுமன்னையர்கருவுறார்வைகுண்டம்பதிவார். (உ௭

நாடரும்புகழ்வீடணன்வேண்டிடநயந்தே
நீடிருந்தனுக்கோடிகொண்டிராமனுநிமலன்
றேடரும்புகழ்படைத்திடக்கீறலாற்செகத்திற்
பீடுறுந்தனுக்கோடியாய்ப்பவத்தையும்பிரிக்கும். (உ௮

முடிவிலத்தனுக்கோடியில்விதிமுறைமூழ்கிப்
புடவியாடகம்புனைதுகில்பொழிசுவையமுத
மடைகொணன்பசுநறியநெய்வண்டயிர்வெண்பால்
கடிகொள்சந்தனங்கனிதுவர்க்காய்சருக்கரைதேன். (உ௯

செய்யசாலிநற்றண்டுலந்திலம்பயறுழுந்து
துய்யபோனகம்பண்ணியந்தீம்புனல்சோதி
மெய்கொள்பூண்பலதானியங்காய்பலவிரும்புந்
துய்யசாகினியன்னமோடேனவுந்தொகுத்தே. (௩0

மையலின்றியேமறைமுழுதுணர்ந்தவாய்மையராய்
வையகம்புகழ்வழுத்திடுமாமறையோர்தங்
கையிலீந்திடிற்கருதியவளித்திடுமதனு
லுய்வர்தம்பொருளுலோபமற்றுதவுதல்வேண்டும். (௩௧

நண்ணுமத்தனுக்கோடியினல்கியதானம்
பண்ணிருஞ்செபநியமமோமத்துடன்பயின்றே
யெண்ணருந்தவமாதியொன்றநந்தமாமிதனுற்
கண்ணுதற்பிரான்கரியமால்கஞ்சன்விண்ணுடர். (௩உ

கேடிலுகரோடியக்கர்மாதவர்கள்கிம்புருடர்
நாடுதென்புலத்தவர்மகிழ்நண்ணுவர்நாளும்
பாடில்சேதுவைநோக்கினுன்றன்னெடுபயந்தோன்
றேடுதந்தையுமவற்குறுதந்தையுந்தெரிக்கில். (௩௩

* புருணகம்-கருச்சிதைத்தல்.

பீடதாம்பரிசுத்தமேயாக்குவன்பிழைத்தே
வாடுறுங்கொடுநரகத்தினின்றுதன்மரபை
வீடதாவெடுத்தேற்றுவன்விளங்கிடும்விறல்விற்
கோடிமூழ்கினுற்கோடியைம்பாதகங்குலைந்தே. (௧௪)

கணமதொன்றினிலழிந்திடுமிச்சயங்கவைநாப்
பணவராத்துயிலொழித்திடும்பண்ணவன்பணித்த
குணமறாரும்விற்கோடியைக்கண்ணினுற்குறித்தோன்
குணமிலாக்கிலேசந்தருகருப்பையுட்குளியான். (௧௫)

வேறு.

சீதையாதொருசெந்தழன்மூழ்கினளத்தடந்திளைந்தோர்க்குக்
கோதையார்கொடும்புருணகநாறுபோமக்கணங்குளிர்கஞ்சன்
றூதையாயிடுமிராமனிற்சிறந்ததுசேதுவுந்தனியாழிச்
சீதரன்னெவர்தம்மினுமதிகன்போற்சிறந்ததுதிகழ்கங்கை. (௧௬)

வேறு.

எங்கேனுமியாதொருநீர்மூழ்கிடினுமிப்படியேயெண்ணியாங்கே
கொங்கேகரோராமசேதோவென்றன்பினொடுங்கிளப்பாரிற்
கொங்கேயுமலர்க்கூந்தற்கோகனதைபிரியாதகுழகன்கோலச்
சங்கேந்துமுகில்சேதுக்கிணையாகும்பாகதியுஞ்சார்வர்தாமே. (௧௭)

நடவுவான்றனுக்கோடியிற்படிந்தருந்தோதயந்தனிற்சேது
வடையுமாகந்தமாதனத்தநன்கமாயிரண்டினுமன்பாலே
கடுகுமாத்திராம்பிண்டபீர்திடிவிருகதெருளதினங்காறு
முடையபசிர்ப்பெருந்தென்புலவாணர்களுளமகிழ்வுறுவாரால். (௧௮)

அதுவுமன்றியிச்சேதுவிற்பிதிர்களையுன்னியாதாவோடே
முதியவந்தணர்தமைக்கொடுசமித்தனிராளவுமுற்றுறுபிண்ட
முதவுமின்றவன்பாவங்களியாவையுமோட்டுவனவனுற்றூர்
வதியும்வெங்கொடுநரகத்தைநவிட்டெழீஇத்துறக்கமேறுவர்மற்றும். (௧௯)

அன்னவன்றமராயினோர்களெனவறைகழலமரேசன்
சொன்னவின்றிடுபுலவர்சூழ்ந்தேத்திடவிழாவுறுஞ்சுவர்க்கத்தின்
முன்னிருந்திடுமேலைவருமகிழ்வொடுமுடிவிலாநிறைசோதி
மெய்ந்நலந்தருபரமவானந்தமாம்விமலவீடடைவாரால். (௨௦)

சீதைமாமணிமார்பகத்தொழினலந்திளைத்தமால்செய்தோங்குஞ்
சேதுமாதலம்புகழ்புருடோத்தமந்திகழ்ந்தகோகரணத்திற்
சீதரன்றிகழ்பதுமநாபந்தனிற்சிறப்புறுஞ்செழுந்தீர்த்தச்
சீதவார்புனற்றிலைக்கடலாடலாந்தினந்தொறுஞ்சேர்ந்தம்மா. (௨௧)

சாற்றுசந்ததிவிருப்பினோன்சனிபுகர்தக்கசேய்தன்னுளிற்
போற்றுசேதுவேயல்லதுபொருகடற்புனல்படிந்திடலாகா
பாற்படுங்கருப்பதிக்கையன்பிரேதகாரியந்தனைப்பண்ணு
மேற்சொல்சேதுவேயல்லதுவேலைநீர்மூழ்குதல்விடல்வேண்டும். (௨௨)

மதிகுலாநுதற்சீதைகோன்வையகம்வாழ்வுறவகுத்திட்ட
முதியவட்புகழ்ச்சேதுவிலுதகத்தின்மூழ்குதன்மொழியுங்கால்
விதிகொளுந்திதிவாரநாண்முதலியநியமங்கள்வேண்டாவாந்
திதமதாகவேதினந்தொறுந்தினந்தொறுமாடலாஞ்சேர்ந்தங்கண். (௨௩)

இருந்துளான்றனையினோர்க்குடன்மூழ்கலாயிறந்தவற்கொண்ணுது
பிரிந்துளானுருத்தருப்பையினிறைந்தெழில்பிறங்கியுருசைவேயபொன்
பொருந்துமால்புணைபவித்திரமேயெனுமம்பிரம்புகன்றேந்திப்
பரந்தவித்தனுக்கோடிநீர்படிகுதலவன்படிகுதலென்றே. (சச)

வீந்தமற்றவன்றனையினோர்ந்தவனுருமேதகப்புனைவுற்ற
வாய்ந்தவப்பெருந்தருப்பையைத்தனைவிரிமதிதருதினாமோது
நீந்துமைக்கடலிருந்தனுக்கோடியினிறைதருசெழுநீரிற்
றேய்ந்திடச்செயிலன்னவன்றானுமேதோய்ந்தவனுவானே. (சரு)

மதிநிறைந்தநாள்வயங்குமாவாசியில்வாரிதியுறைந்தாடிற்
கதிசெய்புண்ணியந்தானுமற்றைநாட்கடலினைத்தொடலாகா
ததிகசேதுவிற்கங்கைசேர்கடலினிற்றினந்தமாடுயார்க்கு
வுதயிற்புருடோத்தமங்கோகன்னத்தென்றுமாடுதலொன்றனும். (சசா)

இந்தமாபெருஞ்சேதுவின்பெருமையைமெடுத்தினையவோரா
முந்தைஞான்றுயர்முனிவரும்பிறர்களுங்கேட்டிடமுருந்தன்று
னத்திடாவருங்கற்புளகாயதிதன்றெனும்வேண்காய
புத்திசேரினையாளெனும்பிருந்தைவிடமுறைப்புகல்வின்றன். (சஎ)

இனையசேதுமாம்புரிந்தகண்டவொமதருணதனுமே
முனமுனுற்றியபவமெலாமக்கனைமுடித்துமேன்னடைவாரா
லனையசேதுவிலாடினோருலகிலினையருதாத்திற்
சென்னமெய்திடாராதலினதன்புகழ்செப்பவதரிதன்றி. (சஅ)

வீயுசோகலமுழங்கொலிவிரிகடலுடுத்திடும்வியன்ஞாலத்
திரில்சேதுவின்பெருமையுமிராமநாயகன்றனதருளுந்தேர்
மாறிலாதசோர்பெருமையுமற்றியாண்மனமகிழ்வுடனெண்ணி
நூறுகோடிகொள்யாண்டுதானுவலினுமவலலாந்தகைமைத்தோ. (சகூ)

என்றிராகவன்கூறிடக்கேட்டுளத்திருடிகண்மகிழ்பூத்தார்
நன்றுநன்றெனுவிலையவாவன்மொழிதலைத்தினைபப்பேதுத்தித்
தென்றிசைத்திகழ்சேதுமாமேச்சான்றிருவருட்டிறமெல்லா
மின்றுபோற்றினராவர்பெருமகிழ்ச்சியைநிகழ்த்தலாம்படித்தன்றால். (ருO)

போற்றல்செய்திடாநாடொதும்புராரிதன்றனையாற்புனைந்து
லேற்றமார்புகழ்ச்சேதுவிற்காவல்பூண்டிருந்தருள்புரிவாராற்
சாற்றுகஞ்சனுந்தேவருமிருடிகற்றம்பியதனைபோது
மூற்றமேவியசேதுமாதவனெனவொருதிருநெடுமாலும். (ருக)

உரகர்மாதவரியக்கர்கந்தருவர்கிம்புருடரும்பார்கனோது
தருமசாத்திரமுயலுவர்கின்னரர்சித்தர்கள்சாரணர்சித்தர்
விரகராம்வித்தியாதரரேனையபூதங்கள்விருப்போடு
திரமதாகவேயிராப்பகற்சேதுவிற்சேவைசெய்திருப்பாரால். (ருஉ)

இனையசேதுநீராடினுந்தீண்டினுமிதுதனையெஞ்ஞான்று
நினைவுசெய்யினுங்காணினுங்கேட்பினுநீங்கிடுந்துயரெல்லா
மனையமத்தனுமாயமெமாயவனருள்செயுமச்சேதுத்
தனைநிகர்ப்பதொன்றில்லையாந்தவநெறிதழைக்குமந்தனைர்காளோ. (ருங)

அண்ணலம்புகழ்ச்சேதுவானதிலருத்தோதயத்தடைந்தாடிற்
புண்ணியந்தருமானந்நிமித்தமாம்பொற்புறுபுரையோர்க
ணண்ணிடுங்கொடுநாகங்களைசமாங்கரணங்கடமிஞூடி
யெண்ணரும்பரமுத்தியுங்கொடுத்திடுமெழில்பெறுமுனிவீர்காள். (௫௪)

மகரதிங்கள்வான்பரிதியாம்வானவன்வந்திடுந்திருவோணம்
புகரில்பார்நளாங்கரணத்தைநீங்கிமேற்புகுந்திடுமமாவாசி
அயனிலாவெதிபாதமோணத்தொடுகூடுதித்திடும்வேளை,
நிகரிலாதிவாரத்தினில்வருமருத்தோதயநிகழ்த்துங்கால். (௫௫)

வேறு.

திரையாருங்கடற்சேதுவடைந்தருத்தோதயத்தொருவன்றீர்த்தமாடிற்
பரையாதியிசையறிவுதொழிலேந்தும்வாயிலாப்படைத்தலாதி
விரையாருமலரோன்முன்சிவமீறுநொடிப்பளவில்விதித்துமாற்று
முறையாதிகட்குபரிபூரணத்தோடுத்துவிதமுற்றுவாழ்வான். (௫௬)

ஆயிரம்வெதிபாதமொப்போரமாவாசியவ்வமாவாசி
சேயவான்கதிர்வாரத்தில்வந்திடிற்செப்புமாயிரப்பத்தா
மோய்வில்சோமாவாசியோடுயர்திருவோணம்வந்துறக்காற்
றுயவின்னயோகம்புணர்புண்ணியப்பெருமையார்சொலவல்லார். (௫௭)

புகலுமிந்நிவைபொங்கியேவிளங்கிடும்பொருவிலாமாயோகத்
தகைகொள்புண்ணியகாலமிந்நிவைகளிற்றனித்தனியொவ்வொன்றிற்
பகருமாளாநானஞ்செபமருச்சனைபணினளவிலையென்றுன்
மகிழ்வொடிந்நிவைகூடுநாளாடினூல்வருமுத்திடமாதோ. (௫௮)

மிக்கநாட்களிலுத்தமஞ்சாலவும்விளங்கியதிருவோணந்
தக்கதிதிகளிலுத்தமந்தயங்கியவமாவாசி
தொக்கமேன்மையோகங்களிலுத்தமந்துகளிரிவெதிபாதந்
திக்கெலாம்புகழ்வாரத்திலுத்தமஞ்செங்கதிர்த்திகழ்வாரம். (௫௯)

இன்னவாம்பெருநான்கியோகங்களுமிரவிமாமகரந்தான்
மன்னுமாதத்தில்வந்திடிற்புண்ணியகாலமாமற்றந்நாண்
மன்னிராமசேதுவிற்படிந்தோர்பிறும்வையகமருளெய்தி
யன்னைநன்வயினிடைத்தடையார்கள்சாயுச்சியமடைவாரால். (௬0)

செப்புமித்தொகைசேர்மகரந்தனிற்றிகழுந்தவுதயத்துக்
கொப்பதாகவேகாலங்கண்மூன்றினுமுறைத்திடினிலையாமாற்
றப்பிலாவிதுபோலவேமகோதயந்தானுமன்னுளந்நாண்
மெய்ப்பெரும்புகழ்ச்சேதுவிற்றுனமேமிக்கநாம்விளம்புங்கால். (௬௧)

பன்னுதானத்தைப்பரிப்பவொழுக்கமும்பயிறவத்தனுமாகி
மன்னுமாமறையந்தமும்புராணமும்வழுவறவாராய்ந்து
தன்னைநேரிலாச்சங்கரன்றாள்களுஞ்சங்கரிதன்றாளு
முன்னியேயருச்சனைசெயும்பனவனேமொழிந்தபாத்திரமாகும். (௬௨)

நந்துறுத்திடுஞ்சேதுவிற்றுனமேநல்கினன்மறையோனு
மிந்தநற்செழும்பாத்திரத்திருகவிப்பரிசினனின்றேற்
சிந்தைதனைத்தநாசங்கற்பித்துதகஞ்செய்துர்தனிற்சென்றீக
வுந்துறற்பலன்விரும்பினேனைதமபாத்திரற்குதவிடலாகா. (௬௩)

வேறு.

இதுதனக்கோரிதிகாசமியம்பிடுவாந்தானபாத்திரத்தையென்னி
யதிதியருக்கருள்சுரக்குந்திலீபனுமாசனதிலாசைகூர்ந்து
விதிதனக்குமகனுகும்வசிட்டமுனிதனைக்கேட்பவிருப்பிதேறு
மதிகமுனிதவவசிட்டனவற்குரைத்ததுத்தமமாமதனைக்கேண்மின். (௬௪)

உத்தமனும்பிரமனருளுயர்புரோகிதவசிட்டமுனிவவோங்கு
மத்தமுதலாந்தானமெவர்க்களிப்பதுனக்கடியேனுதலாலே
புத்திமிகவுடையவனேயவையனைத்துமுள்ளபடிபுகல்வாயென்ன
வுத்தமபாத்திரத்துண்மையுரைக்குதுநீகேட்டியெனவுரைப்பதானுன். (௬௫)

ஓதின்மறையாசாரமுடையவனேயுத்தமபாத்திரமதாகு
மோதினவன்றனக்கதிகஞ்சுத்திரவன்னம்புரியாதுற்றுவாழ்வோன்
வேதமொழிமந்திரங்கள்புராணமிவைகைவந்துவிமலன்றன்னைச்
சீதரனைப்பூசைபுரிந்தில்லறத்தில்வதுவையுடன்றிகழ்ந்துவாழ்வோன். (௬௬)

வருணநெறியாச்சிரமநெறிவழுவாதொழுகுநான்மறைதேர்ந்துவாழும்
பொருவிலவன்யாவனுமுயர்ந்தபாத்திரனென்றேபுகலுநாலுக
வொருமையுடன்பாத்திரத்தையுற்றவர்க்கேயன்னவருக்குதவிகுறோர்
றருமமுதலாதியெலாமடைந்துபாமாயகதிதன்னைச்சார்வார். (௬௭)

உத்தமமாந்தலங்களிலுயர்ந்ததகையோரிடைத்தானமுதவல்வேண்டு
மத்தகையோரில்லையேற்றுட்டபாத்திரர்தங்கையளித்தான்சென்மம்
பத்தொடுமூன்றிரண்டொன்றுகோடிகாமன்றிகப்பமிகாலினை
யமைத்தகொடுஞ்சண்டாளனுமிப்பின்குத்திரனுய்வணிகனுமி. (௬௮)

மன்னுமிமறையவனுய்வதுமைமணிதனிதுவுறிந்தலருந்துமன்மே
லன்றுர்கைமுன்னீந்தானமலந்தன்றுடுலென்றறிகதானே
மென்றுறும்பெறவுதனிவிரத்திரத்துமனங்களிந்தேயபாலிதேறுரிப்
பன்றுநம்புகழ்பெறுசற்பாத்திரன்றன்பாலளிக்கபரிவுகூர்ந்தே. (௬௯)

உத்தமமாங்குணங்குலவுமித்தகையோர்கைத்தானமுதவல்வேண்டு
மத்தலத்திலவரிலரோவிலத்துதகமளித்தவர்கையளிக்கல்வேண்டுஞ்
செத்தவரோயாவினவர்மகற்களிக்கவவரிறக்கிற்றிவதுவேகி
வத்தமனைமன்னர்புகழ்திலீபவெனவசிட்டமுனியறைதல்செய்தான். (௭௦)

என்றாசன்றனக்குமுனியியம்பியபின்னதுமுதற்றிலீபவேந்தல்
வென்றிபுனையுத்தமபாத்திரர்தமக்கேயளித்துவகந்தான்மிக்கதானந்
துன்றுபுரிதான்மார்பீருத்தமபாத்திரமின்றேற்சொன்னவாறே
மன்றலியற்றிடவேண்டும்புண்ணியமாஞ்சேதுவிடைமாபதாமே. (௭௧)

சிறந்திடுமாபாத்திரத்தையினைத்துதகஞ்சேதுவினிற்செய்துவாறே
யுறைந்திடுமூர்தனிற்கொடுக்கவிற்குறைந்தாலறந்தழையாதுனமாகும்
திறந்தெரிந்திப்படிபுரியினிங்கியதுயரமெலாஞ்சேரவோடும்
பிறந்தையுமூர்பரமசாயுச்சியமாம்பெரும்பதத்தைப்பெறுவர்தாமே. (௭௨)

வேறு.

கோதிலாவிருபாக்கற்கோயணங்கும்பகோணங்காஞ்சி
சோதிசேர்ந்தசாளக்கிராமம்புகழ்த்துவாரகைபிரயாகை
யோதுதென்மதுராபுரிநைமிசமயோத்தியேயுயர்ந்தோங்குஞ்
சேதுவேங்கடம்பதுமநாபந்திகழ்தெண்டகாவனங்காசி. (௭௩)

இரவிசேர்பருப்பதமிவையாவையும்பாற்கரபுரியாகு
மருவினான்முடிமயிர்களைந்துண்டியுமன்றுமாந்திடலாகா
திரவியாபிமானத்தினான்மோகத்தாலிவைசெயாதேதம்மூர்
விரவினால்விரவும்பவமன்றியுமேல்வரும்வெகுபாவம். (௭௪)

இந்நாற்றலமன்றியிச்சேதுவினிடத்திருடிகளாலே
சிந்திக்குஞ்சிவனாணையாற்செப்பிடுந்தீர்த்தநாலாறோடுங்
கந்தமாதனத்திலக்குமன்முன்முன்புகண்டிடுமக்குண்டந்
தந்துகூலமேற்கந்தரமேற்படுமுண்டனந்தான்கொண்டு. (௭௫)

முனமுரைத்தவர்நீரினின்மூழ்கியேமுதுமறையவர்தங்கை
மனமுகந்துதக்கிணைகொடுத்தவரருள்வழங்கியபின்பேசிச்
சினவிடைக்கொடியிலக்குமனேசனைச்சேவைசெய்திடுவாரேல்
வினையனைத்தையும்வீட்டியேசங்கரன்மெய்ப்பதம்பெறுவாரால். (௭௬)

வேறு.

சேதுவுக்குச்சரியாகுந்தீர்த்தமோரிடத்துமிலைசெவ்விதாக
வோதலுற்றதவமுமதற்கொப்பதிலைபுண்ணியங்கள்யாவுமொவ்வா
காதலிற்சென்றடைவதொருகதியுமதற்கொவ்வாதுகற்றுநன்காம்
போதமுற்றோர்சேதுவருத்தோதயஞ்சென்றாடுவரெப்போதுந்தானே. (௭௭)

உபராகமாயிரத்துக்கொப்பாமோரருத்தோதயத்தைப்போலப்
பவராகமுறுபாசமறுப்பதொருகருவியதொன்றில்லைபார்மேற்
றவராகவக்குரிசில்சேதுவருத்தோதயநாளந்நாள்சாரிற்
சிவராகநூல்களெல்லாமிதற்குநிகரில்லையென்றேசெப்புமென்றும். (௭௮)

வேறு.

ஆயிரந்தலையிட்டநல்லறுபதாண்டருடருமாகங்கைத்
தோயமூழ்கினாலெவ்வளவறமென்றுமுனிவரர்சொன்னார்க
ளாயநல்லறமாமருத்தோதயமகோதயத்தடைந்தோர்காற்
றூயராமசேதுவிற்படிந்தாலுநிச்சயஞ்சொல்லுங்கால். (௭௯)

பன்னிடும்மருத்தோதயமகோதயவேளையிற்பவம்யாவும்
வென்னிடும்பிரயாகையிலாயிரமாகநீர்விழைந்தாடிற்
றுன்னிடுந்தருமத்தொகைதுன்னிடுமிராமசேதுவிற்சோதி
மன்னிடுந்தனுக்கோடியிலோர்விசையாடினிச்சயமாதோ. (௮௦)

பாயமூன்றுலகத்துளதீர்த்தங்கள்யாவினும்படர்ந்தாடி
னேயபுண்ணியமெத்தனையத்தனையுற்றிடுமெழிலார
மேயகுன்றுமக்கொங்கைநற்சீதைகோன்விதித்திடும்விறற்சேதுச்
சேயநல்லருத்தோதயத்தொருவிசைசேர்ந்துமூழ்குறிற்றிண்ணம். (௮௧)

வேறு.

பிரமவதிவின்றிநன்றிகொன்றுதிரிபாதகராம்பேதையோரும்
பரிவொடுமாபாதகமேசெய்கின்றவன்னியபாதகரும்போகி
புரமருவுசேதுவருத்தோதயத்தோர்காற்படிந்தாலொழிப்பர்பாவந்
திரமருவுநன்றியிழந்தோர்க்கெந்தத்தலங்களினுந்தீர்வேயில்லை. (௮௨)

எந்நன்றிகொன்றார்க்குமுய்வுண்டாமுய்வதிலையிருமையானு
செய்ந்நன்றிகொன்றமகற்கென்றுரைக்குநூலேனுஞ்சேதுச்சேர்ந்தே
யந்நன்றிகொன்றவரும்புகழருந்தோதயத்தொருகாலாடினோர்
பின்னின்றபாவமெலாம்பெயர்ந்தோடும்பரிகாரம்பெறுவர்மாதோ. (௪௩)

யாவர்சிலமானவர்கள்சேதுவருந்தோயத்திலாடலாது
மேவிடுமோகாதியினல்விடுவார்கள்விழியிழந்தார்விழுமாபோலப்
பாவுபெருங்குடும்பமெனும்புணரியுழந்தேயற்றிமேபுறமாட்டா
தோவிலருநரகடைவர்புராணமெனுங்கடல்பருகுமுனிவிர்காள். (௪௪)

சேதுவின்பாலருந்தோதயத்தாடிற்றினகரமண்டலம்விண்டேடிப்
பூதலமெண்பிரமபதந்தானடைவர்சேதுவிலப்போதிலாடி
நாதனிராமேசனையிறைஞ்சகிர்மகன்கவிகணன்காண்டேன
லோதமுறுமுனிவிர்களிவணையினைந்துருக்கியங்கலிகமாதோ. (௪௫)

தமையடைந்தபிடிசாடும்பொருட்டருந்தவுதயமயந்தாறுபொன்று
விமையடைந்தோர்வணங்குசகராநனுங்குமலனைபெயனிலேயுரச்
சுமையடைந்தசேதுவருந்தோதயத்திலருச்சிக்கற்கதமான
வமையடைந்ததோட்சனகனைவனகபிகமிழுமாயுங்காலே. (௪௬)

வருதிதிவாகரகாந்திக்கிருப்பிடமாஞ்சகரகவணங்குகோன்யான்
வருதிமதிக்கடவுளோமலர்மடந்தைசுகோதரனேசைதயின்வைப்பே
சருதிபகாந்திரிகோத்திரத்துதித்தாயுனைத்தொழுகேன்கடாரிகேறுமெய்
கருதியருக்கியந்தருகேன்வைக்கொண்டினென்றிவர்க்குக்கழறிப்பின்னர். (௪௭)

வெதிபாதமாயோகயாதகங்களனைத்தினையும்வீட்டிவேழும்
கதியாரான்மாலினிடங்கனிதுறைவாயாபிரஞ்செய்கையாயான்செய்
கதியாருமருக்கியத்தைக்கைக்கொள்வாயென்றெல்கேறயங்துபோற்றி
வெதிபாதந்தனைவணங்கியருக்கியமிம்முறையன்பால்விளம்பியிந்து. (௪௮)

மதியொடும்பணிந்தபாமேசனைபெல்வுயிருக்கையங்கொழுகன்
கதியின்வழிகடப்பிக்குங்கண்ணுதிபேயனையவுங்காட்டிவானைத்
திதியொடுகாள்வாரமிவைக்கடிபதியேமாதவுருக்தேவேகாவ
விதவடிவேபணிகுவன்யானுதவுமருக்கியங்கொள்வாயெனவிளம்பி. (௪௯)

இதமாமிவ்வகையருந்தோதயத்தொருவனவாவர்மந்திரத்திருதேல
விதமாநர்க்கியங்கொடுத்துத்திரவியசத்திக்கேற்பவிதிதனால்
புதராகுமவர்கள்பொருட்டியாயனதானத்தினையும்புரிகபோதப்
பதிறுல்வர்பன்னிருவரொண்மரொழுபோதுவர்பகருமவர். (௫௦)

மறையவனயலங்கரித்துவெண்கலபாத்திரமாதன்மாத்திருதேல
யுறுவதொருபாத்திரமேயாதல்புதிதாகவமைத்துவைத்தி
னிறையவிடும்பாற்சொன்றிசருக்கரைநெய்கனியிவற்றுனிறைத்துமுன்னை
மறையுமவர்முன்வைத்தேதக்கிணைதாம்பூலத்தோடளித்துப்பூணல். (௫௧)

அடியனேன்சத்தியுமிவ்வளவென்றேலயமொழியுமறைந்துதானம்
படியிமையோர்பாலளித்துப்பலவோனிபெயற்றினையும்பயாதாய்நற்
கடவுளர்தம்முருவொன்றாய்க்காரிளிக்குமகிழ்கொடுக்குங்கவின்றுழக்கன்
றுடையமனயிறைத்துக்காத்தொழுதியபாற்சுரபியுடனுதவிப்பின்னர். (௫௨)

செகநாதாநாரணனின்செஞ்மகாளாகுமிந்தத்திருவோணத்தின்
மகிழ்வொடுநான்மறையவர்க்கெவ்வளவேனுநான்கொடுத்தமற்றித்தான
மிகவாகவருள்புரிதியென்றுசெந்தோடவிழுமரவிந்தவீட்டிற்
புகுமாதுகுடிகொள்ளும்பொன்மார்பிற்புத்தேளைப்போற்றிசெய்தே. (௯௩)
உமிவொருமனைத்திறுக்குமதிபதியேசுரர்க்கமுதமுதவுந்தேவே
படர்சோதிரோர்மணிக்குவிலவொழுகும்பலகலைக்கும்பதியேயெங்கு
முடையானேயாண்டருளாயுனைத்தொழுகேனெனமதியையுவந்துபோற்றிப்
படியேயுடபுகழுருக்கன்றனைத்தாழுமுறைமையையும்பகாக்கேண்மின். (௯௪)
அடாதுபவமுடைக்குமிருஞ்சுடரோயுனக்கிரகமமர்ந்தவாழு
மிடமாருமொருபகவாவுன்பாதகமலத்திலெய்தனுநான்றும்
கடன்மேவுசெகநாதாகாலதினநாதனேயெனக்கெக்காலு
முடியாதவன்பருளாயென்றருக்கன்மதியிவரைமுடியிற்குழ்ந்து. (௯௫)
சூரியசந்திரர்க்குரியமகவாகுந்தோன்றலேநான்மைத்தாய
பாரியால்வைதிபாதயோகமேயுன்னடிகள்பணிகுவேன்யான்
வாரியுறுசேதுவிலெவ்வளவேனுநான்செய்ததானமன்ற
வேரியல்பாகிறைவேகொண்டிடுதியெனவைதிபாதந்தனையிறைஞ்சி. (௯௬)
சாருமிரவலர்க்குதவுங்கற்பகமேசரணர்த்தனரோசரித்தவாமுஞ்
சீரியமாதந்தடனேயிருதயனகாலமுமாம்வாசுதேவே
யோரிலிவைக்கீசுரனேயரியேயென்பவமொழித்தியென்றுபோற்றி
யோரியலமறையவரைமிப்படியேயருச்சித்தங்கிறைஞ்சியேத்தி. (௯௭)
வேறு.
பின்விராணியவிராத்தம்பிறங்காமவிராத்தமன்ன
மின்னவையுலோபமின்றியியற்றிப்பார்வணவோமத்தைத்
தன்விகாரசான்றனைத்தகைபெறவலங்கரித்தே
பொன்னுதிவிம்பங்கோப்பாலுகைகுடைபூசித்தாய்க்க. (௯௮)
இன்னணமிவைமுக்கிற்சேதுவிடையருத்தோதயந்திற்
பின்னொருதருமம்வேண்டாம்யாவையும்பெற்றோனன்றுன்
றன்விகர்சேதுவல்லாத்தலங்களினிருந்திட்டாலும்
பன்னுமிம்முறையருத்தோதயந்தனிற்பண்ணல்வேண்டும். (௯௯)
வேறு.
ஞானமாதவிர்க்கந்தமாதனத், தானதெண்கடற்றன்னிலயோத்தியர்
மானவேற்படைமன்னன்வகுத்திட்ட, மேன்மைச்சேதுவையுள்ளம்விரும்பியே.
ஒதுமானமுஞற்றிடும்வேலையிற், சேதுசேதுவென்றேதிடிற்செய்திடும்
பாதகம்பொருகோடிபறந்திடுஞ், சோதிசோழியாப்பதந்துன்னுவார். (௧௦௧)
தேவிலோர்கணஞ்செப்புமனக்கணம், வாரிசூழுமிச்சேதுவில்வைகுறி
னேரிலந்தகன்றூதர்மற்றேனையோன், பார்வைசென்றிடுமெல்லைபடர்ந்திடார். ()
இராமசேதுவிற்கோடியிராகவ, விராமநாதன்சனதியிலக்குமன்
விராமனன்பன்கவிகதிரோன்மக, விராவணன்றம்பியென்றிவரன்றியும். (௧௦௩)
பொன்றிடாவிட்டன்புகழ்க்காசிபன், றென்றமிழ்க்கலைசேருமகத்திய
னன்றிசேர்தருகோசிகனாத, னென்றிரேருமேர்கொண்டசாபாலியும். (௧௦௪)
வாமதேவனையும்வண்மைராமனுக், காமதேயெனுமன்பினர்யாரையு
மேமமாந்தினமெண்ணிநிடுக்கணே, போமதன்றியுமுந்திபுகுவரால். (௧௦௫)

தேடுசத்தியகேத்திரஞ்சித்திர, கூடமத்திசயிலங்குடந்தையே
கேடில்சாளக்கிராமமரங்கநற், பாடல்சேர்ந்தசுவேதபருப்பதம். (௧0௬)

காசிலாதநற்காஞ்சியரித்தல, மாசின்மோகினிமாபுரங்கோட்டியூ
ரேசிலாதவிடபகிரியெழிற், கேசவன்னுறையுஞ்சுகசேத்திரம். (௧0௭)

வெதரிகாவனமேவுசேடாத்திரி, மதுரைகண்ணநகரமலர்த்திருப்
பதுமநாபம்பகர்புருடோத்தமங், கதிவழங்குபுல்லங்கடிகாத்திரி. (௧0௮)

சீனிவாசந்திகழ்பத்தநாதமே, யானசீர்த்தியசிந்தங்குருங்ககம்
வானர்போற்றுமயிந்திரம்வாருண, நானிலம்புகழ்ந்தேத்துநயிமிசம். (௧0௯)

ஆடுறும்பதிமற்றுமரித்தலத், தாடுறும்புனலாலகலாவக
மூடுறும்புகழ்ச்சேதுவின்மூழ்கினல், வீடுறும்மிதுமெய்மையதாகுமே. (௧௧0)

ஊழிவாய்க்கடுங்காலினுயிர்ப்பெறீஇப், பாழிவாய்நெட்டுடற்பெரும்பாந்தண்மே
லாழிவாய்த்துயினீததவனுற்றிட, வாழிமாதவத்தோர்கள்வணங்கிட. (௧௧௧)

வாய்ந்தசேதுவிலாடினர்மாபவந், தேய்ந்துமாய்வதுஞ்செப்புமிச்சேதுவிற்
றோய்ந்திடாதவர்தொல்லைப்பெரும்பவம், வீந்திடாததுமெய்ம்மையதாகுமே.

ஆவிகட்கிதமாமஞ்செழுத்தையு, மோவிலாநமச்சிவாயவென்றோதிடார்
பாவியாருளங்கேளார்பவங்களுந், தாவியோடுமிச்சேதுவினனத்தால். (௧௧௩)

முந்தையாமெழுத்தோடுநமோவென, நந்திலங்குகைநாராயணயவென்
றிந்த்வெட்டெழுத்தாலுருவேற்றலார், சிந்தியார்பவஞ்சேதுவிற்சிந்திடும். (௧௧௪)

மற்றிராமன்மனமகிழ்பூத்திடு, முற்றவாறெழுத்தையுகந்தோதலார்
பற்றிடாருளங்கேளார்பவங்களு, மெற்றுஞ்சேதுவெழின்முனிவோர்களே. ()

நத்திலங்குகைநாரணனுளெனு, மத்தினத்தவனேன்பிழையார்பவ
முத்திலங்குமுழங்குதிரைக்கடற், சித்திரல்கிடுஞ்சேதுவிற்றீருமே. (௧௧௬)

ஏதின்மாமறைச்சாபாலமேழினு, லாதிநன்முடியங்கங்களெங்கணும்
பூதிமேற்றிரிபுண்டரம்பூசிடார், பாதகங்களுஞ்சேதுவிற்பாறிடும். (௧௧௭)

அறிவினலறியாதவரன்றனைப், பொறிகொண்மார்பனைப்புங்கவர்தங்களை
மறுவில்வேதமரபினிற்பூசியார், செறியும்பாவமுஞ்சேதுவிற்றீருமே. (௧௧௮)

சாபமேருவினன்றடந்தாமரை, நாபனுதியர்பூசைக்குநற்சந்து
தூபதீபந்துணர்மலர்தந்திடார், மாபவங்களுஞ்சேதுவின்மாயுமால். (௧௧௯)

தவளமாமதிசூடியசங்கரற், குவமனற்றசீருத்திரமந்திரத்
தவமிலாவபிடேகமளித்திடார், பவமுமாழ்கடற்சேதுவிற்பாழ்படும். (௧௨0)

அரனுமாயனுமாதியதேவர்கள், புரிவுசெய்யும்புருடசூத்தம்முதற்
பரியுமாபாவமானந்திரிமது, திரிசுபன்னந்திகழ்பஞ்சசாந்தியே. (௧௨௧)

இவைகளாலபிடேகமிவர்களுக், குவகையாற்செய்யவுன்னலர்பாவிக
ளவர்கள்பாவமுமாழ்கடற்சேதுவிற், றுவரப்போயதுந்தொன்முனிவோர்களே.()

பாயுமாநதிச்செஞ்சடைப்பண்ணவன், றூயமாலெனுஞ்சுந்தரன்பொற்றிருக்
கோயில்சூழ்ந்துவணங்கிலார்கொடுந், தீயதீமையுஞ்சேதுவிற்றீருமே. (௧௨௩)

வேறு.

ஆரணப்பரியினுருதியோர்தமை, மார்கழித்திங்கள்வைகறையின்மாபெருஞ்
சீரியற்பூசைசெய்யாதநீமையு, நீரலைச்சேதுவினீங்குமாலரோ. (கஉ௪)

மதுவழிந்தொழுகியமாலைக்கொன்றைசேர், புதுமதிச்சடிலனைப்பொறிகொண்
மார்பனைத், துதிதருதிற்றிலர்தொல்பவங்களுங், கதிதருசேதுவிற்கழியுமாலரோ.

நாசமில்செழுஞ்சிவநாமந்தன்னையு, மாசில்சாளக்கிராமத்தையுமனத்
தாசைகூர்துவாரகாசக்கரத்தையும், பூசியார்பவமுமிச்சேதுப்போக்குமால். ()

களிமிகவுளங்கொள்கங்காமிருத்திகை, துளசிமன்மிருத்திகைதூயநன்னுத
லொளிபெறப்புனைவொருடையபாவமுந், தெளிபுனற்சேதுவிற்றீருமாலரோ. ()

கோவிசந்தனத்தினைக்கோடுநெற்றியி, லாவிசேர்நெஞ்சினிலம்புயத்தினிற்
பாவமோசனம்வரப்பரித்திடார்பவ, மோவிடுஞ்சேதுவினுதகமுற்றினால். (கஉஎ)

உருத்திராவிழிமணிகளத்தாரத்திடாக், கருத்திராவினர்பவக்கணமும்புண்ணிய
சருத்திரமுனிவரர்பெற்றசந்தியந், திருத்திரவியமிகர்சேதுவிற்கெடும். (கஉஅ)

கருக்கிளருயிர்களைக்காத்தளித்திடு, முருக்கிளர்ந்தோங்கியவும்பர்நாயகன்
மருக்கிளர்துழாய்மணிவனைந்திடார்பவம், திருக்கிளர்சேதுவிற்றீருமாலரோ. ()

இரவிவயிராமியத்தெழுந்துசுத்தனு, யரியாருமமுஞ்துதியொடன்னவர்க்
குரியமந்திரமற்றுமுண்மையாமனுத்,திரமொடெண்ணலர்பவஞ்சேதுவிற்கெடும்.

ஆரவனைமுமுணமறலின்மூழ்கியே, வேதமாதாவெனவிமலமுற்றிடுந்
திதில்காயத்திரிசந்திசெய்துபின், றேறுடிடார்பவங்களுமொழிக்குஞ்சேதுவே. ()

வேறு.

சாயம்பிராதாவுடனவுபாசனமுமாத்தியாணிகமுந்
தேயும்பாவமெனப்பிரமயாகம்வைசுவதேவமுட
னேயுமதிதியருக்குச்சிப்பூசையுஞற்குருயர்பூசை
சாயங்காலம்பண்ணியிடார்பவமுந்தனுக்கோடியிற்றவிரும். (க௩௩)

வேறு.

இச்சியார்பிறந்தையையெண்ணில்வேதத்தின், முச்சியார்பொருளவாய்முற்றுமீந்
தவ, ருச்சியாம்வேளையிலுற்றபோதவர், பிச்சையாற்றிலர்பவஞ்சேதுப்போக்கு
மால். (க௩௪)

வடாதுவகயிலையாளிசைத்தமாமறை, விடாதிசையாதவரிசைத்துவிட்டவ
ரிடாதவர்சிராத்தமாளயம்பிதிர்க்கள்பாற், கொடாதவர்பாவமுங்குலையுஞ்சேது
வில். (க௩ரு)

நித்தியமேயெனமிகழ்சிராத்தமுஞ், சத்தியமாகுமட்டகைச்சிராத்தமை [மே.
மித்திகசிராத்தமும்விரும்பிலார்பொருள், வைத்தலோபிகள் பவஞ்சேதுமாற்று
பாயசமுப்பழம்பானகம்முடன், சேயதாம்பூலம்வத்திரஞ்செருப்புட
ஞயசந்தலர்சருக்கரையொடாதவர், காய்வுறுகுடைகழைகட்டின்மற்றுமே. ()

சித்திரைமதியினிலுவாவிற்சித்திர, குத்தருக்கருத்திகொள்பொருட்டுமாமறை
வித்தருக்களித்தலைவிரும்பிடார்பவ, மைத்தடஞ்சேதுவின்மாறுமாலரோ.(க௩எ)

நல்லனவொழுகுநன்மையாளனு, மல்லனவொழுகுமன்மையாளனுஞ்
செல்வினம்விழுங்கடற்சேதுமூழ்கினு, மெல்லினின்முழுகலிப்பிறப்பிலேறுவார்.()

இல்லிடைமயங்கலென்றிசைக்குஞ்சாகர, வல்லலையகற்றிமோனசையுற்றவன் [ன்.
செல்லெனும்படிவமாரிராமசந்திரன், சொல்லரும்புகழ்த்தனுக்கோடிதுன்னுவா

வேறு.

முக்காலுஞ்சத்தியமாவிதமாகச்சாரமதாமொழிகின்றேன்யான்
மைக்காலன்றனையுதைத்தமலர்க்காலைமனத்திருத்துமாதவத்தீ
ரெக்காலந்தானுமழிவெய்தாதவிருஞ்சேதுவெய்தினோர்க
ளக்காலையொருக்காலுமழியாதபேரின்பமடைவரன்றே. (கசக)

இப்பொழுதுத்தமசேதுக்கதைமுனிவீருமக்கியாமியம்பினேமா
லிப்பெருஞ்சேதுவின்காதைபடிப்பவர்கேட்பவர்தங்கட்கேய்ந்தநோய்கள்
செப்பரியகொடுந்துக்கந்தீக்கனவுகடுத்துஞ்சலாதிதீர்ந்தே
செப்புறுமக்கினிட்டோமமுதலமகமொருங்குஞற்றுஞ்செய்யபேறும். (கசஉ)

எப்புவனங்களுநிறைந்தசகலதீர்த்தமும்படிந்தாலெய்தும்பேறு
மொப்பரியபெருஞ்சாந்திபுண்ணியநால்வேதமுக்காலோதும்பேறு
மெப்பெயரினேருமடையாதபெரும்பீடுகளுமெய்தஞான்றும்
தப்பறவேயடைந்துசுவர்க்கத்திருந்துபரலோகந்தன்னைச்சார்வார். (கசங)

வேறு.

காவிவாள்விழிக்காமருசானகி, யாவிபோலுமிராமனருச்சித்த
தேவன்வாழுமிச்சேதுபுராணத்திற், ருவிலாதசருக்கத்தொகைதன்னில். (கசச)

ஒன்றுகூறினர்கேட்டவரொப்பிலாத், துன்றுவேதத்துறைபிறழாமலே
மன்றவாற்றியவாம்பரிமேதமாம், வென்றியாகவியன்பயன்மேவுவார். (கசரு)

இரண்டுகூறினர்கேட்டவரீறிலா, முரண்டராதமறைமுறைமுற்றிய
வரண்டரும்பசுமேதத்தடைந்திடேர், திரண்டயாகப்பயனதுசேர்குவார். (கசசு)

பத்திசைத்தவர்கேட்டவர்பத்தியாற், குத்திரச்சிறகீர்ந்தகுலிசனோ
டொத்தருத்திமிக்கோகையொடன்புறீஇ, யுத்தமத்திருப்பீடத்துறைகுவார். ()

இருபதோதினர்கேட்டவரேருடை, யருணவாளொளியாயிரந்தோடவிழ்
விரைசெய்தாமரையாதனமீமிசை, மருவுவானவனோடுமருவுவார். (கசஎ)

முப்பதோதினர்கேட்டவர்முண்டகற், கப்பனுளும்வைகுண்டத்தடைந்தவற்
கொப்பவேமகிழ்வோடுமுறைகுவார், செப்பொணாதபெரும்புகழ்த்தீர்த்தரோ. ()

நாற்பதோதினர்கேட்டவர்நாலிரு, மாற்பெருந்திசைவானவர்போற்றிடுஞ்
சீர்ப்பிறங்குமுருத்திரதேவனோ, டேற்புறுந்திருமேவியிருப்பரோ. (கருo)

ஐம்பதும்படித்தன்புடன்கேட்டவ, ரெம்பிறப்பறுத்தாண்டருளெம்பிரா
னும்பர்மாமதிசூடியுமாபதி, சம்புநம்பன்றனையடைவாரரோ. (கருக)

இவையனைத்துமிசைத்தவர்கேட்டவ, ருவகையுற்றொருகாலுயர்வாகிய
சிவமெனப்பெயர்செப்பிடுகின்றதோர், நவையின்மாசிவலோகத்தைநண்ணுவார்.

வேறு.

இருமுறைகேட்டவரியம்பினோர்கடாம், பொருவிகந்தோங்கியவிமானம்புக்குலர்
யருமறையாகமமனைத்துமோதிடுந், திருவளம்பெருகுசாமீபஞ்சேர்குவார். (கருங)

மும்முறைகேட்டவர்மொழிந்துளோர்கடாம்
பொய்ம்முறைவாசகம்புகன்றிடாதநூற்
செம்மறைப்பொருளதாஞ்சிவனுக்கன்பராய்
மெய்ம்முறையயன்றனதுருவமேவுவார். (௧௫௪)

நான்முறைகேட்டவர்நவின்றுளோரருட்
கோன்முறையோச்சியேயண்டகோடிநூற்
பான்முறையாணையினடாத்தும்பால்விடை
மேன்முறையீசனோடொன்றிமேவுவார். (௧௫௫)

வேறு.

ஒருகவியேதானுதலிதிற்பாதியாதலித்தவுயர்புராணத்
தொருபதமேதானுதலொருமொழியேதானுதலுண்மைசான்ற
வொருபுனிதவெழுத்தாதலொற்றுதலொருமுறைகேட்டுரைத்தாலந்த
வொருவிசையிலன்றன்றங்குருநற்றுபவமனைத்தினையுமொழிக்குமாதோ. (௧௫௬)

கஞ்சமகண்மணவாளன்பூசைபுரிசிவன்சேதுக்காதைசெப்பும்
விஞ்சுபுகழ்ப்புராணமிதுபடித்தாலுங்கேட்டாலும்விளம்புமிந்தச்
செஞ்சொல்வளர்புராணவெழுத்தெவ்வளவுண்டவ்வளவுசெனனத்தீய
வஞ்சபெரும்பாதகமுமஞ்சிவெருண்டக்கணத்திலகலுமம்மா. (௧௫௭)

பூதலமெல்லாம்புரக்கும்புண்டரிகக்கண்ணன்முன்புரிந்தவிந்தச்
சேதுவின்மாக்கதைதன்னைப்படிப்பவர்கள்கேட்பவர்கள்சேர்புராணத்
தோதுமெழுத்தெவ்வளவுண்டவ்வளவுசேதுநடுவுற்றநாலா
றுதியதீர்த்தந்தன்னிலடைந்தாடிப்பலனனைத்துமடைவரன்றே. (௧௫௮)

அதுவன்றிச்சேதுவெனுந்தலநாப்பணன்னியதீர்த்தங்களாக
வதின்றதீர்த்தமெல்லாமாடியபேறடைந்திடுவர்மால்செய்பூசைப்
பதியொன்றுசேதுமாக்கதைபடிப்போர்கேட்போர்கள்பரஞானத்தின்
மதியொன்றிப்பிரமதியானத்திருந்துமகிழ்பூத்தமாதவத்தீர். (௧௫௯)

ஆர்த்ததிரைக்கடலாடையங்கணிலமெங்கணுஞ்சென்றளப்பிலாத
தீர்த்திதருமெழிலிலுக்குங்கிடைப்பரிதாமெழிற்சீதைகேள்வன்போற்று
மீர்த்தபுனன்மதிவேணியிராமேசன்புராணத்தைமெழுதுமன்பர்
தீர்த்தலரும்பவந்துடைத்துச்சிவசாயுச்சியபதத்தைப்பெறுவர்திண்ணம். (௧௬௦)

இந்நமான்மியமிருக்குமில்லிடமேசேதுவெனவெண்ணியாங்கண்
மந்நனேமுதற்கிரகபீடைவியாதிகளலகைமருள்வேதாள
முந்துமாபயஞ்சோரபயமின்றியொழியுமதுநான்குதீர்த்தங்
கந்தமாதனமயன்மாலிராமநாயகனுளுங்கலந்துவாழ்வார். (௧௬௧)

பன்னிவெருவாகவினிக்கூப்பிடிலென்மூவுலகும்பதியுமங்கண்
மன்றுமதிலோர்சருக்கஞ்சிராத்தகாலந்தன்னில்வழுத்தியிட்டா
லன்னதனிலுற்றிடெல்லாசாரதோடமவையனைத்துநீங்கும்
பின்னர்நமதகந்தன்னிற்பிதிர்க்களுந்தாம்பேருவகைபெறுவர்மாதோ. (௧௬௨)

திருமருவுபருவகாலந்தன்னிற்றிகழ்சீதைமணாளன்போற்று
மொருபெரியகடவுளுளமகிழுமதிலோர்சருக்கமோர்பாட்டேனும்
பொருவரியமறையவர்தம்புனிதவாய்திறந்தினிதுபுகலக்கேட்போர்
வருசாபிருழுக்கன்றுவளார்மேதிசொரிபாலின்வளங்களேய்வார். (௧௬௩)

மடத்திலெழிலாலயத்தின்மலர்ப்பொழிலிற் பெரியோர்கண்மனையிற்பொய்கைத்
தடத்திடத்தினதிக்கரையிற்புண்ணியபூமியிலிருந்துசாற்றலாகும்
விடப்படுமன்னியதலங்கடயிலிருந்துவினவலுறவிளம்பலாகா
கடற்றிரைகள்கதிர்முத்தங்கொழித்தெறியுஞ்சேதுமாக்கதைகற்றோரே. (௧௬௪)

இக்கதையைநியமத்தோடியைந்திட்டுக்கேட்டலுமிப்படியேயென்றும்
பக்கமிருநான்குதனிற்பன்னொன்றிற்பதினொன்கிற்பாரதுவைகுந்
திக்குலகெண்ணயனத்திற்றிகழ்தனுச்சிங்கங்கன்னித்திங்கடன்னின்
மிக்குயருமாடுதலாம்பிறந்திடுநாள்விசேடித்துவிரிக்கமாதோ. (௧௬௫)

மிக்கபுகழ்ச்சேதுமான்மியந்தன்னிற்றீர்த்தங்கள்விளம்பலானு
முக்கணனைமாயவனைமுனிவர்களையிருவினையைமொழிகையானுந்
தொக்கமறைப்பொருடிரட்டிச்சொற்றவியாதனும்விரும்புந்தொன்மையானு
மெக்கதையின்மேலாகுமிதனகத்திற்புண்ணியமாயியம்பலானும். (௧௬௬)

வேந்துமுனிவோர்களையும்பிரமமுனிவோர்களையும்விளம்பலானுந்
தீந்தொடைமாக்கதையிதுதான்பவித்திரமாம்பவப்படைகள்சிதறமோது
மாய்ந்திடுமாசுருதியினுமுழங்குவதாமதனையாய்ந்தறிந்துளோர்க்கும்
வாய்ந்திடுசம்மதமாகும்பலன்விழைந்தோரிதனைவாசித்தல்வேண்டும். (௧௬௭)

இக்கதைகேட்டவர்படித்தோர்தமையரியாசனத்திருத்தியருச்சித்தேத்தி
மிக்கபணிதூசுநிலம்வியன்சுரபிசெம்பொனவைவிருப்பினீந்தான்
முக்கணன்மாலயன்பூசைமுற்றியதாமொழிந்திடின்மூவுலகும்பூசை
யக்கணத்தியற்றியதாமாதலினாலவரையருச்சிக்கவன்பால். (௧௬௮)

சீருலவுசததளப்பொற்செங்கமலக்கண்ணனுந்திருவுமிக்க
வேருலவுமிலக்குமனுமிக்காதைகேட்டவர்க்குமியம்பினோர்க்கு
நீருலவுகடலாடைநீணிலத்தின்மிகுபோகமளித்துநேர்ந்த
பாருலவுபவமகற்றிப்பரபோகமுத்தியையும்பாலிப்பாரே. (௧௬௯)

போதமிகுவியாதன்முகபுண்டரிகவிதழ்திறந்துபொழிந்ததேனு
மேதமிலிக்காதைதனையெழிற்றருமபுத்திரன்முனிவரோடுங்
கோதறுந்சேனையொடுந்தவுமியனுங்குரவனருள்கொண்டுகூற
வாதரங்கூர்நியமாசாரத்துடனேகேட்டதுவாமாயுங்காலே. (௧௭௦)

ஆதலினான்முனிவீர்காளிக்காதையருமறைச்சம்மதமேயாகு
மேதமறவிதனுண்மையெடுத்துமக்கிங்கிசைத்திடலாலுணர்ந்தீரிந்தச்
சேதுவின்மாக்கதையோதுநீவிருநும்பாலடைந்தநிகழ்மாணுக்கர்க்
கோதுமினென்றுயர்சூதமாமுனிவனுவப்பினொடுமுரைத்தப்பின்னர். (௧௭௧)

பொருவிகந்தவம்முனிவனுடல்புளகமிகவெழுந்துபோர்ப்பப்பொங்கிக்
கரமலர்கள்சிரங்கூம்பக்கணிப்பரியவானந்தக்கண்ணீர்கால
மருவுமுயர்வியாதனைத்தன்மனத்திடத்துநினைந்துருகிவல்லைவாழ்த்திப்
பரவியுவந்தங்கணுயர்பாடலினோடாடலினைபயின்றனன்றே. (௧௭௨)

உற்றருளுமக்காலைமற்றிவன்பேரன்பாமொற்றெல்லையோடிப்
பற்றினனியீர்த்திடலும்பராசரன்றன்குமரனெனப்பகர்வியாதன்
மற்றிணையில்லாதுயர்ந்தமாணுக்கற்கருள்சுரக்கும்வாஞ்சையாலே
யற்றமிலாமுனிவரொடுஞ்சூதனுறையாச்சிரமத்தடைந்தானன்பால். (௧௭௩)

அடைந்தருளும்பொழுதவனைக்கண்களிப்பமுன்கண்டாதரவின்மிக்குத்
தொடர்ந்தமுனிகணங்களொடுமெதிரெழுந்துபணிந்தந்தத்தொல்வியாதன்
றடங்கமலத்தாள்கடமிற்றண்டமெனத்தாழ்ந்திறைஞ்சித்தருமானந்தக்
குடந்தருநல்விழிநீராங்குளிர்ந்தபுனலாட்டினன்மெய்க்குணக்குன்றன்னான். ()

அவ்வேலையன்னையர்தாமிளம்பருவப்பாலகனைப்பணைக்குமாபோன்
மெய்வேலையருளினொடுசூதமுனிதனைப்பலகால்விருப்பிற்புல்லி
மைவேலைகடைந்தபிரான்கலையுருவாம்வியாதமுனிமகிழ்ந்துபின்னர்ப்
பொய்வேலைகடந்தமுனிவரரளித்தவாதனத்திற்பொலிந்திருந்தான். (௧௭௫)

இருந்ததற்பின்வியாதமுனிசூதனைமாதவரொடுமுன்னிருத்திப்பின்ன
ரருந்தவத்தோர்தமைநோக்கியரியதிருவாய்மலர்ந்தாங்கருள்வானிந்தப்
பொருங்கடற்சேதுவின்காதைநாமறிவதிதுசூதன்புனிதவாக்கா
லொருங்குறச்சொற்றதுவேதாகமப்பொருளுமிதுவேயாமுணைப்பக்கேண்மின். ()

சுருதியொடுமிருதிபுராணுதிசாத்திரமெலைக்குந்தொன்மையாகக்
கருதுமிதிகாசமட்டோமற்றுமாலெவைதமக்குங்கழறொணாத
பொருண்முடிவுமிதுவேயாம்புரையறுமெய்ஞ்ஞானத்திற்புந்திவைத்தே
தெருளுறுவீரிவ்வாறுசிந்தைகொண்மினையமின்றித்தேசமிக்கீர். (௧௭௭)

என்றெடுத்தாய்ந்தியம்பிப்பினிக்காதைதருமனுக்கெம்மருளினாலே
வென்றிதருநவுமியன்றன்விருப்பினொடுமெஞ்ஞான்றும்விளம்பாநிற்ப
னென்றுமீர்படிந்திடவுங்கேட்டிடவுமியம்பிடவும்வேண்டுமென்ன
நன்றுரைத்தபரிசுவேதன்கிறைந்துமெனமுனிவர்நவின்றிட்டாரே. (௧௭௮)

வேறு.

என்றிவைமொழிந்துமிக்கவிருடிகட்கருள்வழங்கித்
துன்றியபுகழ்சேர்கின்றசூதமாமுனிவனோடும்
வென்றிசேர்வாளுருகவெள்விடைக்கொடியுயர்த்த
குன்றுமான்கரத்தோன்வாழுங்கயிலையையடைந்தான்மாதோ. (௧௭௯)

வென்றிகொளிராமனாரும்விளங்கிடவருச்சித்தேத்துஞ்
தென்றமிழ்நிராமசேதுத்திகழ்கதையினமும்போற்றித்
துன்றியமுனிவரோதத்தொடங்கினராதலாலே
யொன்றியபுகழினேடுமோங்கியதுலகமெல்லாம். (௧௮௦)

வேறு.

மாதுமலைவளர்காதல்வல்லிவாழ்கமாற்கருள்கூர்சிவராமநாதன்வாழ்க
சேதுவுடன்றனுக்கோடிதீர்த்தம்வாழ்கதிகழ்தீர்த்தமனைத்துஞ்சிறந்துவாழ்க
நாதனிராமேச்சுரனையருச்சிப்போருநற்குணத்தலமனைத்துநயந்துவாழ்க
மாதவர்கண்மிகவாழ்கவிராமநாதமாமுனிவனீடூழிவாழ்கமாதோ. (௧௮௧)

சேதுபலச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம், ௩௪௩௮.

சேதுபுராணமுற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்டதேசிகன் திருவடிவாழ்க.